# என்னுரை..

ஒரு நூல் என்பதன் முழுமையுமே அதை எழுதியவன் தமக்குத்தானே பேசிக் கொண்டவைதாம். பிறகு தனது உரையெனும் பெயரில் தனித்து எதற்காக எதையேனும் பேசவேண்டுமென பலமுறை யோசித்ததுண்டு. ஆயின் அதுவொரு சாத்தியம். வாசிப்பவரிடம் நேரிடையாக எதையேனும் எடுத்தியம்புவதற்கான சாத்தியம்.

அச்சாத்தியத்தில் அவன் தனது பெருமிதங்களை அடுக்கலாம் அல்லது அளக்கலாம். தானெழுதியவை குறித்த முறைப்பாடுகளை முன்வைக்கலாம். எவருமே கேட்காவிடினும்கூட, தாம் எதற்காக எழுதவேண்டும் என்பதுபற்றி இரண்டு பக்கங்களுக்கு எதையேனும் விளக்கலாம். எனது சாத்தியம் வேறு. நான் நம்பிக்கையிழந்து சோர்வுறாதபடி பக்கபலமாக நிற்கும் பலருக்கும் நன்றியுரைக்கலாம்.

ஒரு படைப்பென்பது... எனத் துவங்கி நான்கு பக்கங்களுக்கு எக்கச்சக்கமாக குழப்பியடித்து, வாசிக்கும் உங்களை எரிச்சலூட்டி, புத்தகத்தை விட்டெறியச் செய்வதில் விருப்பமில்லையெனக்கு.

இது எனது இரண்டாவது சிறுகதைத் தொகுப்பு. இலக்கியம் பற்றியெல்லாம் எதுவுமறியாத ஒரு எளிய மனிதனின் சிறு எழுத்துமுயற்சிகளே இதிலுள்ள கதைகளெனக் கூறலாம். இவை உங்களை வசீகரிக்கலாம். அட ! என வியப்பூட்டலாம். என்ன கருமமிது என்று வதைக்கவும் செய்யலாம். எவ்வித உத்திரவாதங்களுமில்லை என்னிடம்.

இன்னவற்றை எழுதவேண்டுமென முறைவைத்து எழுதும் கலை எனக்கு வாய்க்கப் பெறவில்லை இன்னமும். தான்தோன்றித் தனமாக பட்டென்று வீழும் ஒற்றைப் புள்ளியினின்று துவங்கி, அதன்போக்கில் பயணித்து, அது நிற்குமிடத்தில் நிறுத்திக்கொண்டு விடுகிறேன் கதையை. இக்கதைகள் யாவும் அவ்விதம் எழுதப்பட்டவையே. மற்றபடி இவற்றின் தரம்குறித்துக் கூறவேண்டியது காலமும், வாசிக்கும் நீங்களும்தான்.

இக்கதைகளை தங்களது இதழ்களில் பிரசுரித்த அந்தந்த இதழ்களுக்கும், தொகுப்பு நூலாக வெளியிடும் ஜீவா படைப்பகத்திற்கும், நண்பன் கார்த்திக் புகழேந்திக்கும், பிழைத்திருத்தம் செய்துகொடுத்த நண்பன் ஹரீஷ் கணபதிக்கும், எப்பொழுதும் என்னோடு உடன் நின்று பிரியம் சொரியும் அனைத்து ஜீவன்களுக்கும் அளவிலாத.. அன்பும் நன்றியும்...


மாதவன் ஸ்ரீரங்கம்
9843570057

# 1.அதிதி

ஒரு நள்ளிரவில் தான் அது நிகழ்ந்தது. எப்போதும்போல பாதி உறக்கத்தில் பசித்துப் பால் வேண்டுமென்றான் பிள்ளை.
உறக்கத்தையும் தவிர்க்க மனமின்றிப் பிள்ளையின் பசியையும் பொருட்படுத்தும் ஒருவித ஜென்நிலை. அந்த தியான நிலையிலேயே சாரி அரையுறக்க நிலையிலேயே பாலெடுத்து வரக் கிச்சனுக்குள் நுழைந்தால் உடல் சிலிர்த்துப் போனது.
கிச்சனில் ஒரு பூனை எதையோ சின்ஸியராகத் தேடி நின்றுகொண்டிருந்தது. வேறென்ன பாலையோ தயிரையோதான்.
தயிர் பிரிட்ஜிலிருக்கும் விஷயம் அதற்கு தெரிந்திருக்காததில் எனக்கு மகிழ்ச்சியே. ஆனால், மூடிவைத்த பால் பூனைக்கு அருகில் தானிருந்தது.
எனக்கு வந்த கோபத்திற்கு அளவேயில்லை. அப்பார்ட்மெண்டின் இரண்டாம் தளத்தில் குடியிருந்தும் எப்படியோ ஏறி வந்துவிட்ட பூனையை எதிரியாக எரிச்சலாக எதிர்கொள்ளவேண்டியிருக்கிற யதார்த்தத்தை ஏதும் செய்ய முடியவில்லை.
அறிவு கெட்ட பூனைகள் என்று வசைபாடினேன். பூனை மிகுந்த கோபத்துடன் “மியாவ்” என்றது. கூடவே "யாரைப் பார்த்து அறிவில்லை என்கிறாய்" என்றும் கேட்டது. பூனை வாய் திறந்து பேசுவதில் எனக்கு ஆச்சரியமில்லை. இது பின்நவீனத்துவப் பூனையாக இருக்கக்கூடுமென்று புரிந்துகொண்டேன்.
"என்வீட்டில் வந்து உட்கார்ந்துகொண்டு எனையே முறைக்கும் துணிச்சல் எப்படி வந்தது உனக்கு?” என்றேன்.
"அது என் தலையெழுத்து. எனக்கென்று வீடிருந்தால் நான் ஏன் உன் வீட்டிற்கு வரப்போகிறேன்" என்றது.
ஓ.. இது கம்யூனிசப் பூனை போலிருக்கிறதென்று நினைத்ததை அதனிடம் சொல்லவில்லை.
"இத்தனை வக்கனையாகப் பேசுகின்ற நீ, பிள்ளைக்கு வைத்திருக்கும் பாலைத் திருட வந்திருப்பது தவறென்று உணரவில்லையா?"
என் கேள்வி பூனையை நிரம்ப பாதித்திருக்கவேண்டும். ஓர் அசூயையான மியாவை வெளியிட்டது.
பிறகு, "நியாயமாகக் கிடைக்காதவற்றை வலியத்தான் எடுத்துக்கொள்ள வேண்டுமென்னும் புரிதல் கூடவா இல்லை

உனக்கு?" என்று என்னையே எதிர்க்கேள்வி கேட்டது.
மேலும், "பெட்ரூமில் பசித்தழும் உன் பிள்ளை போலத்தான் எனக்கும் பசிக்கிறது என்ன செய்ய?"
நான் அதன் தர்க்கத்திலிருக்கும் நியாயத்தை நினைத்து மவுனமாய் இருந்தேன்.
"சரி இப்போது நான் உன்னை தடுத்துத் தாக்கினால் என்ன செய்வதாக உத்தேசம்?"
"அது உன் தாக்குதலின் வீரியத்தை பொறுத்தது. சும்மா பயம் காட்டுகின்றாயா, நிஜமாகத் தாக்குவாயா என்பதற்குத் தகுந்தவாறு நானும் உன்னைத் தாக்க நேரலாம்"
"நீ பெரிய நக்ஸலைட் பூனையாகத் தெரிகின்றாய். உன்னோடு பேச எனக்கு நேரமில்லை. காயப்படுத்தவோ காயப்படவோ உத்தேசமில்லை நீ கிளம்பலாம்" என்றேன் அதனிடம்.
அது உதட்டை ஒரு மாதிரியாக சுழற்றி அசட்டையாக என்னையே பார்த்தது. பின்பு, "ஆனால் எனக்கு நிரம்பப் பசிக்கிறதே" என்றது.
இந்த நேரடியான பிரயோகத்தை நான் எதிர்பார்க்கவில்லை. எனக்கு சற்று வருத்தமாகக் கூட இருந்தது. ஆனால் இருக்கும் பாலை பூனைக்கும் பகிர்ந்து கொண்டால், காலைப் பனியில் எழுந்துசென்று நான் பால் வாங்கக் கடைக்குச் செல்ல வேண்டியிருக்குமே என்று கவலைப்பட்டேன்.
இருந்தும் கண் முன்பு பசியோடிருக்கும் ஒரு பூனையைவிட காலைப் பனியோ என் உறக்கமோ பெரிதென்று தோன்றவில்லை. சரியென்று அதனிடம் ஒப்பந்தம் தொடங்கினேன்.
"சரி போகட்டும் விடு பூனையே. விரோதியே ஆனாலும் வீட்டிற்கு வந்தால் விருந்துபசாரம் செய்யும் கலாச்சாரத்தின் வழித்தோன்றல் நான். எனவே நீ நகர்ந்து வழிவிடு. இருக்கும் பாலை உனக்கும் என் பிள்ளைக்குமாகப் பகிர்ந்தளிக்கிறேன்"
இந்தமுறை பூனை வெளியிட்ட மியாவில் அதிருப்தி தெரிந்தது.
"உன் பிள்ளை கடைசியாக எப்போது பாலருந்தினான்?" என்று கேட்டது.
"எதற்கு இப்போது சம்பந்தமின்றி பேசுகிறாய்? வழியை விடு"
"காரணமிருக்கிறது சொல்" என்று சற்று ஆக்ரோஷத்துடன் கேட்டது.
"இரவு ஒரு பதினோரு மணியிருக்கும்"
"நல்லது. ஆனால் நான் சாப்பிட்டு இரண்டு நாளாயிற்று தெரியுமா?"
எனக்கு தர்மசங்கடமாகப் போயிற்று.
"அதற்கு?"
"எனக்கு இருக்கும் பால் முழுவதும் வேண்டும்"

எனக்கு வந்த கோபத்திற்கு அளவேயில்லை.
"ஏய் சாத்தான் பூனையே. போனால் போகிறதென்று பார்த்தால் தலைக்கு மேல் ஏறி உட்கார்ந்து கொள்ளப் பார்க்கிறாயா?”
அது மிக நிதானமாக பார்த்தது. சற்றும் எதிர்பாராத வகையில் தாவி ஜன்னலில் ஏறி என்னைத் திரும்பிப் பார்த்தது. மிகுந்த வருத்தத்துடன் வெளியிட்ட மியாவ் என்னை என்னவோ செய்தது.
"தொந்திரவிற்கு மன்னித்துக் கொள். நான் கிளம்புகிறேன். நன்றி"
இப்போது என்னைக் குற்றவுணர்வு தொற்றிக் கொண்டது. நான் சற்று பக்குவமாக அதனிடம் சொன்னேன்.
"சரி விடு கோபித்துக் கொள்ளாதே. எல்லாப் பாலும் வேண்டுமென்று கேட்டதில் சட்டென்று நான் டென்ஷனாகிவிட்டேன். எனக்கு லோ பிபி இருக்கும் விஷயம் உனக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை தான். சரி வா பால் தருகிறேன். இத்தனை தூரம் வந்து விட்டு வெறும் வயிற்றுடன் திரும்பிச் செல்லாதே. எனக்குத்தான் பாவம் வந்துசேரும்"
பூனை ஜன்னலிலிருந்து இறங்காமல் என்னைப் பார்த்து சொன்னது.
"இதெல்லாம் எனக்குப் பெரிய ஆச்சரியமில்லை. பசியென்று கேட்கும் மனிதர்களுக்கே உணவிடாத இனமல்லவா மனித இனம். பக்கத்து வீட்டுக்காரன் பசியுணராமல் பீட்சா ஆர்டர் செய்யும் பரம்பரையைச் சேர்ந்தவர்களல்லவா நீங்கள். பரவாயில்லை. நான் கிளம்புகின்றேன். எனக்கென்று ஏதாவது தின்று தீர்க்கப்பட்ட மீன் வறுவல் குப்பையில் கிடைக்கக்கூடும்"
அதன் குரலிலிருந்த துயரம் பெரிதாகத் தாக்கியது என்னை.
"ச்சேச்சே. நீ தவறாக எண்ணிவிட்டாய். 'காக்கை குருவி எங்கள் ஜாதி' என்று பாடியிருக்கிறார் எங்கள் கவிஞர்"
"அட சரிதான் போப்பா. அவர் மனைவிக்கே ஒழுங்காய் சோறு போட வக்கில்லாத கடுப்பில் எதையேனும் கிறுக்கிவிட்டுப் போயிருப்பார்"
"ஓ உனக்கு பாரதி பற்றியெல்லாம் கூடத் தெரியுமா?”!!
"அது கொஞ்சகாலம் ஒரு நூலகத்தில் வசிக்க நேர்ந்தபோது கொஞ்சம் வாசித்தேன். பெரிதாக அவர் என்னை ஈர்க்கவில்லை. பிச்சைக்காரனைப் போல அது வேண்டும் இது வேண்டுமென்று பராசக்தியிடம் எதையாவது கேட்டுக் கொண்டேயிருப்பார்"
பரவாயில்லை. இது நிறைய வாசிப்பனுபவமுள்ள இலக்கியப் பூனை என்று உணர்ந்துகொண்டேன்.
"சரி நீதான் சொல்லேன். எதுதான் நல்ல இலக்கியமென்று சொல்லுவாய்?”
"சொன்னால் ஏற்றுக் கொள்வாயா என்று தெரியவில்லை.

செயல்வழியற்ற வெற்றுச் சிந்தனைகள் எதுவுமே இலக்கியமாகாது என்வரையில். குறித்துக்கொள் என்வரையில்தான். நான் தவறாகவும் இருக்கலாம்"
உள்ளிருந்து மறுபடி பிள்ளையின் அழுகுரல் கேட்டது. பூனை என்னைப் பார்த்து ஒரு ஸ்னேகமான மியாவை வெளியிட்டது.
"சரி போ. உன் பிள்ளை அழுகிறான். நானும் கிளம்பவேண்டும்"
"சரி இந்தா இந்தப் பாலைக் குடித்துவிட்டுப் போ" என்று ஒரு தம்ளரில் பால் ஊற்றி அதனருகில் வைத்தேன். அது பாலையும் என்னையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு கேட்டது.
"அவ்வையார் என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா?"
"என்ன?"
"கொடிதினும் கொடிது அன்பிலாப் பெண்டிர் கை உணவு தாமே"
"சாரி. எனக்குப்புரியவில்லை"
"அதாவது அன்பில்லாத பெண்ணின் கையால் இடப்படும் உணவுதான் கொடுமையான விஷயம் என்கிறார் அவ்வையார். நீ முதலிலேயே கொடுத்திருந்தால் பரவாயில்லை. இப்போது பசியைவிடத் தன்மானம்தான் பெரிதெனக்கு"
நான் மன்னிப்புக்கேட்கும் மனதுடன் அதனிடம் மன்றாடினேன்.
"நிஜமாகவே என்னை மன்னித்துவிடு. ஆனால், தயவுசெய்து பாலைக் குடித்துவிட்டுச் செல், ப்ளீஸ்"
"பார்த்தாயா. இப்போதுகூட உன் மனிதத்தனத்தைக் காட்டுகின்றாய். வேண்டுமென்று கேட்டால் மாட்டேனென்கிறாய். வேண்டாமென்று சொன்னால் வற்புறுத்துகிறாய். மொத்தத்தில் உன் விருப்பப்படி மற்றவர் நடந்துகொள்ள விரும்புகின்ற மனித ஈகோதான் இது"
இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தேன்.
"சரி தவறுதான். மன்னித்துவிடு. ஓப்பனாகச் சொன்னால், எனக்கு உன்னை ரொம்பவும் பிடித்திருக்கிறது. இத்தனை கம்பீரமான துணிவுள்ள பூனையை நான் சந்தித்ததேயில்லை. எனக்காக இந்தப் பாலைக் கொஞ்சம் குடித்துவிட்டு, என்னோடு கொஞ்சம் பேசி விட்டுப் போ"
என் குரலிலிருந்த நேர்மையும் கெஞ்சலும் அதற்குப் புரிந்திருக்க வேண்டும். திரும்பி இறங்கி சமையல் மேடை மீது வந்து உட்கார்ந்து கொண்டது.
"இருந்தும் பிரச்சனை அப்படியேதான் இருக்கிறது. இந்த பால் என் பசிக்குப் போதாது. அரைகுறையாய்ச் சாப்பிடுவதைவிடப் பட்டினி மேலானது"

''பரவாயில்லை. முழுவதும் நீயே அருந்திக் கொள்'' என்றேன்.
''பிறகு உன் பிள்ளைக்கு என்ன செய்வாய்?”
''நான் அதை யோசித்துவிட்டேன். அவனுக்கு செர்லாக் இருக்கிறது. வெந்நீரில் கரைத்தால் போதுமானது. பால் தேவையில்லை''
''இதை முன்பே செய்திருக்கலாம்'' என்று சலித்துக் கொண்டது.
''சரி உன் பிள்ளைக்கு செர்லாக்கை கொடுத்துவிட்டு வா. நான் காத்திருக்கிறேன்''
நான் பூனை சொன்னபடியே பிள்ளைக்கு செர்லாக் கலந்து கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வந்தேன். பாலைத் தொடாமல் அது எனக்காகக் காத்திருந்தது. நானும் மேடைமேல் அசவுகரியமாக உட்கார்ந்துகொண்டு பாலை அதனருகில் நகர்த்தினேன். ஒருவாய் குடித்துவிட்டு,
''பாக்கெட் பாலா? குழந்தைகளுக்கு அதிகம் ஒத்துகொள்ளாது. பார்த்துக்கொள்''
''நகரத்தில் கறந்த பாலிற்கு எங்குசெல்ல?”
அது பதில் சொல்லாமல் பால் முழுவதும் குடித்துத் தீர்த்தது.
''யானை தன் பலத்தையறியாமல் பாகனின் அங்குசத்திற்குப் பயந்து பிச்சையெடுப்பது போலத்தான் மனிதர்களும் தங்கள் உள்ளாற்றலை உணராமல் புலன்களில் சிக்கி நாசமாகின்றனர்''
''பெரிய பெரிய தத்துவமெல்லாம் பேசுகின்றாய். எனக்குத்தான் விளங்கவில்லை''
''விளங்கிக்கொள்ள விரும்பவில்லையென்று சொல். சுனாமி பற்றி நான் முன்பே எச்சரித்தேன். மனிதர்களால் அதைப் புரிந்து கொள்ள முடியாமல் போனது துரதிர்ஷ்டம்''
நான் ஆச்சரியமாகக் கேட்டேன்.
''ஓ உனக்கு வருங்காலம் பற்றியெல்லாம் கூடத் தெரியுமா? பெரிய ஜோசியப் பூனையாக இருப்பாய்போல''!
''ஏன் ஏதாவது குறி கேட்கவேண்டுமா உன் எதிர்காலம் பற்றி?”
''எப்படி கரெக்டாகக் கண்டுபிடித்தாய்?”
''அது தான் உன் கண்களிலேயே தெரிகிறதே. சரி ஒன்று மட்டும் சொல்கிறேன். ஆக்சுவலாக நான் உன்னுடைய சிறுகதையொன்றின் பாத்திரம்''
நான் சிரித்தேன். சரியான முட்டாள் பூனை நீ. எனக்கு எழுதவே தெரியாது. அப்படி உத்தேசமும் இல்லை. சும்மா அளந்துவிடாதே''
''இதற்குத் தான் நான் எதையும் சொல்வதில்லை. சரி நேரமாயிற்று நான் கிளம்பட்டுமா?”
''எது எப்படியோ. உன்னைச் சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி.

வேண்டுமென்றால் தினமும் வருகிறாயா? தனியாக உனக்கென்று பாலெடுத்து வைத்துவிடுகிறேன்"
இந்த முறை வெளிப்பட்ட அதன் மியாவில் ஏளனம் தொனித்தது.
"நானென்ன மனிதர்கள்போல நாற்பது வருடங்களுக்குச் சேர்த்து யோசிக்கும் ஜாதியென்று நினைத்தாயா? அடுத்தவினாடி என்னவென்று அறியாத அறிவற்ற வாழ்க்கை பேரின்பமானது. முடிந்தால் ஒருநாள் மட்டும், எவ்விதமான இலக்குகளுமற்று தாந்தோன்றியாக சுற்றிப்பார். நான் சொல்வது உனக்குப் புரியும்"
"ஆனால் அது ரிஸ்க் இல்லையா?”
"பயமாக இருந்தால் இப்போதே சென்று சவப்பெட்டியில் படுத்துக்கொள். பாதுகாப்பாக இருக்கும்"
"சரி எல்லாம் போகட்டும். ஏதாவது நல்லதாக சொல்லிவிட்டுப்போ. என் வாழ்வைப்பற்றி"
அது இடியெனச் சிரித்தது.
"முட்டாள் மனிதனே. இத்தனை வருடத்தில் உனக்குத் தெரியாத எதைப் புதிதாக நான் சொல்லிவிடப்போகிறேன். எனக்கு வருங்காலம் பற்றியெல்லாம் எதுவும் தெரியாது. சும்மா திரித்துவிட்டேன். போய் பிழைப்பைப் பார். நான் வருகிறேன்"
நான் ஏமாற்றத்துடன் நின்று கொண்டிருக்க, அது சற்றும் தயக்கமின்றி ஜன்னல்வழி வெளியேறியது. பக்கத்துவீட்டின் மாடி கைப்பிடிச்சுவரில் நின்று திரும்பி என்னைப் பார்த்தபோது அதன் கண்கள் பளபளத்தன.
***
"என்னங்க.... என்னங்க..." என் மனைவிதான் எழுப்பினாள்.
"என்னம்மா?”
"எங்கங்க புள்ளைக்கி வச்சிருந்த பாலையெல்லாம் காணோம்?”
நான் இரவு நிகழ்ந்ததைப்பற்றி அவளிடம் சொன்னேன். அவள் புலம்பத்தொடங்கினாள்.

"அய்யோ இந்த மனுஷனை வச்சிக்கிட்டு என்னதான் செய்ய? ஏங்க பைத்தியமா உங்களுக்கு ? பூமியில பூனை இனமெல்லாம் அழிஞ்சு பலநூறு வருஷங்களாயிருச்சி. எந்தப் பூனை வந்து பாலை குடிச்சிட்டுப் போச்சாம்?”

# 2.கடலை நீந்திக்கட

கிறிஸ்தோபர் தன் கிடாரின் நரம்புகளை மெல்ல நீவிவிட்டான். பெருவெடிப்பிற்காகக் காத்திருக்கும் இசை உள்ளுக்குள் இம்சித்தது அவனை. மெல்ல மெல்லப் பார்வையாளர்கள் கூடத்தொடங்கிவிட்டார்கள். அந்தச் சிறிய விடுதி மதுக்கோப்பைகளின் உரசல் ஒலிகளாலும் சிற்சில மனிதர்களின் பேச்சொலியினாலும் நிரம்பியிருந்தது. உதட்டுச்சாயம் கலையாமல் முத்தமிட்டுக்கொண்ட சீமாட்டிகளின் காதலைக் கண்டும் காணாததுபோல் மேடையில் உட்கார்ந்திருந்தான்.

அவனால் அரங்கிலுள்ள எல்லாவற்றையும் தெளிவாக பார்க்கமுடிந்தது. மேடையில் சூழ்ந்திருந்த மெல்லிய இருளில் அவன் காத்திருந்தான். பேரர்களின் சலிப்பற்ற புன்னகையுடனான நடமாட்டம் அவனுக்கு பழக்கமாகியிருந்தது. லிஸாவை அவன் சந்தித்தபோது, அவன் ஒரு பேரராகத்தான் இருந்தான். நகரத்தின் மிகமுக்கியமான செல்வந்தர் பிலிப்ஸின் மகள் அவள்.

பேரழகு தேவதை கொள்ளையழகு என்று வர்ணிப்பதற்கான எந்த வார்த்தைகளும் சற்றே போதாக்குறையுடனிருந்தன அவள் முன்பு. மெல்லிய புருவமும் நீலக் கண்களும் எவரையும் சட்டென்று வசீகரித்துவிடும். திட்டமிட்டுக் கத்தரிக்கப்பட்ட அவளது செந்நிறக்கூந்தலில் ஒரு கற்றை காற்றிலாடுகையில் பார்ப்பவர் மனங்களும் அதன் ஊசலில் இணைந்துகொள்ளும்.

"தேவதைக்கு நல்வரவு. உண்பதற்கு என்ன கொண்டுவரட்டும்?”

அவள் மறுபடி பிச்சையிட்ட மின்னல் புன்னகையில் கொஞ்சம்போல எரிந்தது இவன் இதயம்.

"என் சிறகுகளை மறந்து வீட்டில் வைத்துவிட்டேன். வாடகைக்கு ஏதும்

கிடைக்குமா?” என்றாள் அவனை கேலிசெய்யும் நோக்கத்துடன்.

இவன் மிகுந்த வருத்தத்துடன் முகத்தை வைத்துக்கொண்டு கூறினான்.

"அடடா !! தங்கள் சிறகுகளுக்கு ஒப்பான வேறொன்று இந்தப் பிரபஞ்சத்திலேயே இல்லையே"

அவள் களுக்’கென்று சப்தமிட்டுச் சிரித்துவிட்டாள்.

ரிங்கிய அவள் செல்பேசியினை ஒரு குழந்தைபோலக் காவிக் காதோரம் வைத்துப்பேசியபோது, தான் அந்தக் கருவியாக இல்லையே என்று பொருமினான் இவன். முகமெங்கும் பூத்திருந்த அவள் செந்நிறப்புள்ளிகள் அவளுக்கு இன்னும் வசீகரமாகப் பொருந்தியது. அவள் பேசி முடியும் வரை காத்திருந்தான் இவன். பாதாம் விதைகள் கலந்த ஐஸ்க்ரீம் ஒன்றினை அவள் கொண்டுவரப் பணித்தாள். பரிமாறிவிட்டு நகர்ந்தவனைக் கண்களால் நிறுத்தினாள். "என்னுடன் அமர்ந்துகொள்ளலாமா?” என்றுகேட்டாள். அவன் தயக்கமின்றிக் கூறினான்.
"ஆஹா அது பெரும் பாக்கியம்தான் எனக்கு. ஆனால், நான் இப்போது பணியில் இருக்கிறேன். என் எஜமானர் இதனை விரும்பமாட்டார்"
அவள் முகம் சுண்டிப்போனது.
பிறகு தயக்கத்துடன் கூறினான்.
"நாளை எனக்கு விடுப்புதான். நாளை சந்திப்பதில் எனக்குத் தடையில்லை"
அவள் முகம் மலர்ந்தது. குழந்தைபோலக் குதூகலித்தாள்.
"என்றால் மிக்க மகிழ்ச்சி. நான் நாளை வருகிறேன்" என்றபடி எழுந்து கொண்டாள்.
இவனுக்குத் துக்கமும் மகிழ்ச்சியும் ஒன்றாகப் பிடித்துக்கொண்டது. அதன்பிறகு அவள் அடிக்கடி அங்கு வரத்தொடங்கினாள். சமயங்களில் திறக்கும்வரை விடுதியின் வாசலிலேயே காத்திருந்தாள். உண்ணும் பொருளின் விலையில் பார்க்க மூன்று மடங்கு அதிகமாக இவனுக்கு டிப்ஸ் வைத்துவிட்டுச்சென்றாள். கொஞ்ச நாளைக்குப்பிறகு அவள் வருகை சட்டென்று நின்றது. இவன் வழமைகளில் மாறுதல் ஏற்பட்டது. ஆர்டர் செய்த உணவுகளை மாற்றிப் பரிமாறினான். தண்ணீர் போத்தல்களை நழுவவிட்டான். விடுதியின் மேலாளர் இவனைப் பரிகாசமாக பார்த்துவைப்பதை கவனமாக தவிர்த்துவந்தான்.
ஒருநாள் ரோல்ஸ் ராய்ஸில் வந்து இறங்கிய ஒரு பருத்த கனவான் நேராக இவன் டேபிளுக்கு வந்து தோரணையாக உட்கார்ந்துகொண்டார். விடுதியின் முதலாளிக்கு வந்தவர்மீது மிகுந்த

மதிப்பு உண்டு என்பதால் மேலாளர் இவனை அழைத்துக் கவனமாக உபசரிக்கும்படி எச்சரித்துவிட்டு எஜமானருக்கு போன் செய்தார். சிலநிமிடங்களில் எல்லாம் விடுதிக்கு வந்த இவன் எஜமானர் கனவானுக்கு அருகில் பவ்யமாக நின்றதை பார்த்து இவனுக்கு ஆச்சரியம். பிறகு மேலாளர் சொல்ல தெரிந்துகொண்டான் அவர்தான் நகரத்தின் பெரும் செல்வந்தர் பிலிப்ஸ் என்று.
கிறிஸ்தோபர் பிலிப்ஸை பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறான். அவருக்கு உலகத்தின் மிகப் பயங்கரமான மாபியா கும்பல்களுடன் எல்லாம் தொடர்பிருப்பதாக வதந்தி ஒன்று நகரம் முழுக்க உலவிக்கொண்டிருந்தது. அடிக்கடி அவர் எஸ்டேட்டுகளிலிருந்து ஆட்கள் மர்மமாகக் காணாமல் போவதுபற்றி இவன் பத்திரிக்கை நண்பனொருவன் ரகசியமாக விசாரித்துக் கொண்டிருதான். இறுதியில் அவனும் ஒருநாள் மாயமாகிப்போனான்.
பிலிப்ஸிற்கு கேப்பிச்சினோ கொண்டுவந்து வைத்த இவன் கைகள் மெலிதாக நடுங்கின. அவர் கிளம்புமுன்பு இவனைக் காட்டி எஜமானரிடம் என்னவோ சொல்லிவிட்டுச் சென்றார். நகரத்தொடங்கிய அவர் கார் கதவை மெதுவாகச் சாத்திவிட்டு உள்ளே வந்த எஜமானர் இவனைத் தன் அறைக்கு அழைத்தார்.
"உன் சீருடையின் பித்தான்களைச் சரியாக அணிந்துகொள்" என்றார். இவனுக்குச் சற்று கூச்சமாகிப்போனது.
"இப்போது வந்து சென்றவரைத் தெரியுமா உனக்கு?”
"பழக்கமில்லை ஐயா. செல்வந்தர் பிலிப்ஸ் என்று மேலாளர் கூறினார்" எஜமான் இவனையே கூர்மையாகப் பார்த்துவிட்டுச் சொன்னார்.
"ஆனால் அவருக்கு உன்னை தெரிந்திருக்கிறது. அவர்வீட்டு சமையல்காரருக்கு உதவியாள் வேண்டுமாம். நாளையிலிருந்து சிலகாலம் நீ அங்கேதான் பணிபுரிய வேண்டியிருக்கும். உன்னை எதற்காகத் தெரிவு செய்தார் என்று தெரியவில்லை. வேறு யாரும் தேவையில்லை எனச் சொல்லிவிட்டார். கவனமாக இருந்துகொள்"
இவனுக்கு நிரம்பக் கேள்விகளும் குழப்பங்களும் இருந்தன. எதையும் கேட்டுக் கொள்ளாமல் அனுப்பிவிட்டார். பிலிப்ஸின் பண்ணைவீடு இவனுக்குத் தெரியும். நகரத்தின் வெளிவிளிம்பில் கடற்கரையை ஒட்டிய மிகப்பெரிய பைன் மரத்தோட்டங்கள் நிரம்பிய பங்களா அது. தனது சிறிய லக்கேஜுகளுடன் இவன் அங்கே சென்றுசேர்ந்தான்.
அந்த மாளிகையின் வடிவமே சற்று குதர்க்கமாக இருந்தது. கணக்கு வழக்கின்றி எண்ணற்ற அறைகள். எந்த வராந்தா எங்கு கொண்டுவிடும் என்று கணிப்பதில் சிரமமிருந்தது இவனுக்கு. அனைத்து திசைகளிலும் பணியாளர்களின் புழக்கம்தான் அதிகமிருந்தது. தலைமைச்

சமையல்காரர் கார்லோஸ் ஒரு ஆப்பிரிக்கர். கருத்துச் சுருண்டிருந்த அவர் தலைமுடியில் சாயத்தின் சாயல் தெரிந்தது.
அவர் பெரியதொரு மீனைத் தோல் சீவிக்கொண்டிருந்தார். அதை அவர் செய்த லாவகத்திலிருந்தே பலகாலமாக அதைச் செய்துவருகிறார் என்று தோன்றியது இவனுக்கு. அத்தனை பெரிய சமையலறையை அவன் வாழ்நாளில் பார்த்ததில்லை. சலவைக் கல்லின் குளிர்ச்சி அவன் காலுறை கடந்தும் நெருடியது. காலையில் காப்பி தேநீர் தயாரிப்பது தொடங்கி மூன்றுவேளை உணவும் நடுவில் சிற்றுண்டி தயாரிப்புமாக வேலை நெட்டிமுறித்தது. அவன் உடல் களைத்துப்போய் ஓய்வை யாசித்தது. கார்லோஸ் கருணையற்ற மனிதராக இருந்தார்.
அடிக்கடி இவனிடமும் மற்ற பணியாளர்களிடமும் இப்படிச்சொல்வார். 'கடலை நீந்திக்கட'. அதன் பொருள் என்னவென்றெல்லாம் இவனுக்கு அக்கறையில்லை. உழைப்பின் களைப்பெல்லாம் கூடப் பரவாயில்லை. அந்த பெரிய வீட்டின் அமைதிதான் அதிகக் கலவரம் தந்தது கிறிஸ்தோபருக்கு.
பிலிப்ஸிற்கு இரைச்சல் பிடிப்பதில்லை என்பதுதான் காரணமாக சொல்லப்பட்டது. துளிகூட ஓசையற்ற ஒருவித அதீத சுத்தமும் அமைதியும் இவனுக்கு மிரட்சியைத் தந்தது.
அப்படித்தான் பணிச் சுமைகளற்ற நள்ளிரவு ஒன்றில் முழுப்போத்தல் ஒயின் கொடுத்த உற்சாகத்தில் தனது கிடாரை எடுத்து வாசிக்கத் தொடங்கிவிட்டான். மாளிகை முழுக்க விளக்கெரிய, இரவு உடையுடன் வந்துநின்ற பிலிப்ஸின் கண்களில் நெருப்பெரிந்தது.
அதைப்பற்றியெல்லாம் கவலைப்படாதவனாக தனது கிடாருடன் ஒன்றிக் கிடந்தான் கிறிஸ்தோபர்.
வசமாகப் பிடிபட்ட திருடனைப் பார்ப்பதுபோல் எல்லோரும் பார்த்தார்கள். வெறுப்பை உமிழும் பார்வை அது.
கார்லோஸின் கரகரத்த குரலில் வெளிப்பட்டது ஏச்சா எச்சரிக்கையா என்பதை இனங்காண முடியவில்லை இவனால்.
இறுதியாக வெளிவந்த லிஸா இவனைப் பார்த்து முறுவலித்தாள்.
மினுக்கட்டாம்பூச்சிகள் அங்கங்கே அலைந்துகொண்டிருக்க, வானம் மேகங்களற்று வெறுமையாகக் கிடந்தது.
தூரத்தில் கடலில் அலையாடிய ஓசைகேட்டது. எல்லோரும் இவனைப் பார்க்க இவன் லிஸாவையே பார்த்துக்கொண்டிருந்தான். லிஸா பிலிப்ஸின் காதில் என்னவோ சொல்ல அவர் மவுனமாக அங்கிருந்து நகர்ந்தார்.
மறுநாள் காலை இவன் தட்டில் பிரட் ஆம்லெட்டை வைத்தபடி கார்லோஸ் சொன்னான்.

"ஐம்பத்திரண்டு வருடங்களுக்குப்பின் நேற்றுத்தான் நான் இசையை உணர்ந்தேன் கிறிஸ். உனக்கு என் வந்தனம்"
இவன் ஆச்சரியத்துடன் பார்த்தான்.
"ஆமாம் தம்பி. நான் பிறந்ததே இந்த மாளிகையில்தான். என் தாயும் தகப்பனும் அடிமையாக இந்த நகருக்கு வந்துசேர்ந்தார்கள். பிலிப்ஸ் என்னைவிட சில ஆண்டுகள் சிறியவன். இத்தனை ஆண்டுகளில் நான் எதை இழந்திருக்கிறேன் என்பதை நேற்றுத்தான் உணர்ந்துகொண்டேன்"
கிறிஸ்தோபர் அவரையே பார்த்துக்கொண்டு நின்றான்.
"நேற்று சின்ன எஜமானியால் நீ தப்பித்தாய் தம்பி"
"அது என்ன சமாச்சாரம்?"
"ஓ உனக்கு விஷயம் தெரியாதல்லவா ? பிலிப்ஸிற்கு இசை பிடிக்காது. இங்கு இசைக்கவோ இசை கேட்கவோ கூடாதென்பது அவரது கடுமையான நிபந்தனை. இந்த மாளிகைக்கு வந்துசேரும் பணிக்காரர்களில் சிலர் துரதிர்ஷ்டவசமாக இசைக்காரர்களாக இருந்துவிடுகிறார்கள் உன்னைப்போல"
கிறிஸ்தோபர் ஆம்லெட்டை மென்றபடி பார்த்துக்கொண்டிருக்க கார்லோஸ் தொடர்ந்தார்.
"சென்ற வருடம்கூட பிரஸ்தான்டோ அப்படித்தான் மாயமாகிப்போனான். இரண்டு ஆண்டுகள்வரை ஒழுங்காகத்தான் பணிபுரிந்தான். எப்போதும் அவன் இடுப்பில் ஒரு புல்லாங்குழலை சொருகியபடியே அலைந்துகொண்டிருப்பான். ஆறு மாதத்திற்கு ஒருமுறை அரைநாள் விடுப்பெடுத்து நகரத்திற்குள் செல்லும்போது மட்டும் தெருவில் அதை ஆசைதீர வாசித்துவிட்டுத் திரும்புவான். அவனுக்கு நகரத்தில் ஒரு அழகான காதலி இருப்பதாக அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தான். திடீரென்று ஒருநாள் உன்னைப்போலத்தான் கிறுக்குப் பிடித்துப்போய் மாளிகையில் தனது புல்லாங்குழலை வாசிக்கத் தொடங்கிவிட்டான். அன்றுதான் நாங்கள் அவனை கடைசியாக பார்த்தது. மறுநாள் விடியலில் எழுந்த துப்பாக்கி ஒலி அவனுக்கான இறுதி இசையாக இருந்திருக்குமென்று நினைக்கிறேன்"
கார்லோஸ் பேசப்பேச கிறிஸ்தோபருக்கு நடுக்கம் பிடித்துக்கொண்டது.
"சரி அதையெல்லாம் விடு. மதியத்திற்குப்பின் அவுட் ஹவுஸிற்குச் சென்றுவிடு. பிலிப்ஸின் மகள் லிஸா அங்கே வருவாள். இனி தினசரி நீதான் அவளுக்கு கிடார் இசையை பயிற்றுவிக்கவேண்டும் என்பது பிலிப்ஸின் கட்டளை"
"ஆனால் கார்லோஸ், என்னிடம் கேட்கவேயில்லையே? "

"கறிக்கு வளர்க்கப்படும் பிராணிகளிடம் அனுமதிகேட்டா அறுக்கிறார்கள் ? அதெல்லாம் உன் பிரச்சனை தம்பி. இன்று தான் எனது பணியின் கடைசிநாள். நாளை காலை நான் கிளம்புகிறேன். அநேகமாக உன் விடுதியிலிருந்துதான் எனக்கு மாற்றுச் சமையல்காரன் வரக்கூடுமென்று ஊகிக்கிறேன்"
சட்டென்று கிறிஸ்தோபருக்கு வருத்தமாக இருந்தது. இந்த மாளிகையில் சற்றே மனதுக்கு நெருக்கமாக இருந்ததே கார்லோஸ் மட்டும்தான்.
"பிலிப்ஸிற்கு தெரியுமா ? அவர் அனுமதி கொடுத்துவிட்டாரா?"
கார்லோஸின் முகம் சட்டென்று விகாரமாக மாறியது. ஜன்னலுக்கு வெளியே ஆடிக்கொண்டிருந்த போகன்வில்லா இலைகளை வெறித்தபடி சொன்னார்.
"பூக்களில் வாசமும் வானில் மழையும் கடலில் அலைகளும் இசையில் கரையும் மனமும் யாருடைய அனுமதிக்காகவேனும் காத்திருக்கிறதா தம்பி?"
இவன் சிரித்தான்.
"அதில்லை. இத்தனை காலமாக இல்லாமல், இப்படித் திடீரென்று கிளம்பி எங்கே செல்வீர்கள்? உங்களுக்கு உறவினர்கள் யாரும் இருப்பார்களா என்பதிலும் எனக்குச் சந்தேகம்தான்"
கார்லோஸ் பயங்கரமாக சிரித்தார். அவர் சிரிப்பு அறையில் அடுக்கி வைத்திருந்த பாத்திரங்களில் பட்டு எதிரொலிப்பதாக பிரமை ஏற்பட்டது இவனுக்கு. மேடையைச் சுத்தம் செய்தபடியே கூறினார்.
"கடலை நீந்திக்கடக்க".
அன்றிரவு துப்பாக்கி வெடித்த சப்தம் கேட்டபோது கிறிஸ்தோபரின் உறக்கம் கலைந்தது.
மறுநாள் கார்லோஸின் இடத்தை தனது பழைய விடுதியின் தலைமை சமையல்காரன் நிரப்பியிருந்தான். அதன்பிறகு வந்த தினங்கள் அவனுக்கு சலிப்பூட்டின.
தினசரி லிஸாவிற்கு அவுட் அவுஸில் கிடார் பயிற்றுவிக்க முயற்சித்தான். துரதிர்ஷ்டவசமாக லிஸாவிற்கு புன்னகைக்க மட்டுமே வருகிறது என்பதை தாமதமாகத்தான் உணர்ந்துகொண்டான். அவள் கைகளில் கிடாரும் இசையும் செத்துச்செத்துப்பிழைத்தது. அவள்மீது கொண்ட ஈர்ப்பெல்லாம் அவளது கிடாரின் வழிவந்த ஒலித்துணுக்குகளால் அழிந்து கொண்டிருந்தது. பொறுக்க மாட்டாமல் இறுதியாக கிறிஸ்தோபர் ஒருநாள் அவளிடம் கூறினான்.
"உன் தந்தையின் செல்வத்தால் ஆயிரம் கிடாரை வாங்கிவிடலாம். ஆனால் அதன் இசையை அல்ல"
மிகப்பெரிதாக கதறியழுதபடி அவுட் அவுஸிலிருந்து ஓடிவிட்டாள்

அவள். தனக்குள் மிகப்பெரிய வெறுமையை உணர்ந்தான் இவன்.
சிறுவயதில் பட்டாம்பூச்சிகளை துரத்திப்பிடித்து விளையாடிய தனது கிராமத்திற்குச் செல்லவேண்டும்போல் ஒரு வேட்கை தோன்றியது.
சிலநாட்கள் கழித்து ஒருநாள் பிலிப்ஸ் சொல்லமுடியாத ஆக்கிரோஷத்துடன் மாளிகைக்கு வந்துசேர்ந்தார். அன்றைய அவர் துப்பாக்கிப் பயிற்சியில் எண்ணற்ற தோட்டாக்கள் சிதறின. வியாபாரம் ஒன்றில் தோல்வி என்பதுபோல பணியாளர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள்.
அன்று மாலை சமையல்காரனுடன் நகரத்திற்கு சென்ற கிறிஸ்தோபர் மாளிகைக்குத் திரும்பிச்செல்லவில்லை.
தனது பழைய உணவுவிடுதியின் எஜமானர் இவனை கடுமையாக திட்டித் துரத்திவிட்டார். பழைய நண்பனொருவனின் உதவியால் இரவுநேர மதுபானவிடுதியின் கிடார் இசைக்கலைஞனாக பணியில் சேர்ந்தான்.
அரங்கம் நிறைந்து இவனுக்கு சமிக்ஞை வந்தபின் மெல்ல இசைக்கத் துவங்கினான். நில்லாமல் அலைமோதும் தனது வாழ்வின் வெறுமைகளைத் தனது கிடாரின்வழி வெளியேற்றினான்.
நேரம் செல்லச்செல்ல கிடாரும் கிறிஸ்தோபரும் பிரிக்கமுடியாதபடி கரைந்திருந்த ஒரு கணத்தில் துப்பாக்கி ஒன்று வெடித்தது.
விடுதி சலசலத்து மனிதர்கள் சிதறி ஓடினார்கள்.
விடுதியின் மேலாளர் மிகுந்த வருத்தத்துடன் எல்லோரையும் அமைதிப்படுத்திக் கொண்டிருந்தான்.
தனது இறுதிமூச்சை வெளியேற்றும் முன்பு, பிலிப்ஸின் மாளிகை பணியாள் ஒருவன் விடுதியிலிருந்து மெல்ல வெளியேறியதை பார்த்தான்.
நகரத்தின் மறுநாள் தினசரிகளில் வந்திருந்த இந்த சம்பவத்தின் சில ஊகங்களாக இருந்தவை இவைதான்.
1 ) கிறிஸ்தோபர் என்னும் இளைஞன் செல்வந்தர் பிலிப்ஸின் மகளுக்கு இசை கற்றுத் தரவில்லை என்பதால் கொல்லப்பட்டான்.
2 ) கிறிஸ்தோபர் என்னும் இளைஞனும் பிலிப்ஸின் மகளும் காதலித்ததால் பிலிப்ஸால் கொல்லப்பட்டான்.
3) தன்னைக் குறிவைத்து வந்த கிறிஸ்தோபர் என்னும் இளைஞன் ஒரு இன்டர்போல் அதிகாரி என்று சந்தேகித்த அல்லது ஊரிஜிதம்கொண்ட பிலிப்ஸால் அவன் கொல்லப்பட்டான்.
4 ) கிறிஸ்தோபர் என்னும் இளைஞன் மதுபான விடுதியொன்றில் மர்மமான முறையில் கொல்லப்பட்டான்.

# 3 .கும்முட்டி

மழை மெலிதாகத் தூறிக்கொண்டிருந்தது.
கூனன் அவசரமாக துவைத்த துணிகளை மூட்டைகட்டி கழுதையின் முதுகில் மாட்டிவிட அது பழக்கப்பட்ட பாதையில் நடக்கத் துவங்கியது. இவன் மறுபடி ஆற்றிலிறங்கி கால்களைப் படிக்கல்லில் தேய்த்து பாதங்களைச் சுத்தம் செய்ய ஆரம்பித்தான்.
மழை வலுவாகப் பிடித்துக் கொள்வதற்கான முஸ்தீபுகளுடனிருந்தது.
மேட்டில் வண்டித்தடத்தில் கழுத்துமணி ஓசையுடன் மாட்டுவண்டி வரும் ஓசையும் கேட்டது.
அவன் மேடேறவும் வண்டி வரவும் சரியாக இருந்தது.
கூனன் கள்ளிச்செடியோரம் ஒதுங்கி நின்றுகொண்டான்.
ஆண்டையின் வண்டிதான் அது.
வண்டி இவனைக் கடந்ததும் பின்புறம் அமர்ந்திருந்த ஆண்டை, வண்டியோட்டி முருகையனை நிறுத்தச் சொன்னார்.
இவன் துண்டை இடுப்பில் குறுக்காகக் வைத்துக்கொண்டு சற்றே பணிவாக நின்றுகொண்டான்.
"வீட்டுக்குப்போ கூனா. அம்மா வரச்சொல்லிச்சு உன்னை"
"சரிங்..."
"நேத்தே சொல்லியனுப்புனனே ஏன் வருல?"
இவன் பதில்கூறாமல் அமைதியாக இருந்தான்.
நேற்றிரவு தானிருந்த நிலைபற்றி யோசித்துக்கொண்டிருந்தான்.
அவர் அதட்டலின்மீதான கோபம் உள்ளுக்குள் குமைய வைத்தது.
"பொழுதுக்குள்ற வந்துருவேன். போயி ஊட்ல என்ன வேலைனு பார்த்து முடிச்சிவிடு" என்றபடி இவன் பதிலுக்குக் காத்திராமல் வண்டியை விடச் சொன்னார்.
வண்டி சற்றே இடவலமாய் அலைபாய்ந்துவிட்டு நகர்ந்தது. கூனன் தன் மனதிற்குள் ஏளனமாகச் சிரித்தான்.
வண்டி எங்கு செல்கிறதென்று நன்றாகத் தெரியும் அவனுக்கு.
பக்கத்தில் சொக்கம்பட்டியில் ஆண்டையின் கூத்தியாள் இருப்பது ஊரறிந்த விஷயம்தான்.
வளைந்த தன் பாதத்தை இழுத்துக்கொண்டு அவன் நடக்கத் துவங்கினான். கூனனுக்கு ஆண்டைமீது வைத்திருந்த மரியாதையெல்லாம் காணாமல்போய் ஒருவாரமாயிற்று. தனக்கான மரியாதையை இழந்ததில் நிகழ்ந்தது அது.

கூனன் தான் ஊரின் ஒரே ஏகாலி. பாட்டன் காலத்திற்கு முன்பிருந்தே அவர்கள் குடும்பம்தான் ஊருக்குத் துவைத்துவந்தது. ஊர்த் திருவிழாவில் இவர்களுக்கென்று ஒரு தனித்த மரியாதை ஒன்று உண்டு. தட்டு நிறைய வெற்றிலைப் பாக்குப் பழங்களுடன் உடுப்புகளும் கொஞ்சம் பணமும் வைத்து ஊர் சார்பாகக் கிடைக்கும் மரியாதை அது.
சென்ற வாரத்தின் திருவிழாவில் அது நிகழாமல் போனதற்குக் காரணமே இந்த ஆண்டைதான். ஆனால், அதைவிட மிக மோசமான காரணம்தான் கூனனின் வெறுப்பிற்கு இருந்தது.
கழுதை வெகுதூரம் சென்றுவிட்டிருந்தது.
தடமெங்கும் அதன் முதுகிலிருந்த ஈரத்துணிகளின் நீர்ச்சொட்டுக்கள் மழைத் துளிகளுடன் கலந்து, மணற்புழுதியில் திட்டு திட்டாய்ப் படர்ந்திருந்தன. கற்றாழையில் அடர்ந்திருந்த சிலந்தியின் நூலாம்படைவழி சூரியனின் கதிர்கள் ஜொலித்தன. வெயிலும் மழையும் கூடினால் வரக்கூடிய வானவில்லைத் தேடினான். காலில் சுருக்கென்றது. கருவேல முள். நல்ல பெரிய முள். முக்கால் அங்குலமிருந்தது. உள்ளுக்குள் உடைந்துவிடாமல் பக்குவமாக பிடுங்கிய முள்ளின் முனை மருதாணியிட்ட விரல்கள்போல் சிவந்திருந்தது.
ஊரை நெருங்குமுன்பு மகள் எதிரில் அவனை நோக்கி ஓடிவந்தாள்.
அவளது செம்பட்டை பிடித்த முடிகள் காற்றில் பிரிப்பிரியாக ஆடின.
"ஏஞ்செலுவி?”
" ஆண்டையூட்ல உங்கள வரச்சொன்னாகளாம். அம்மா கூட்டியாரச்சொல்லிச்சி"
கூனனுக்குச் சொல்லமுடியாதபடி ஆத்திரம் வந்தது.
"ங்கொமாளுக்கு அறிவு மளுங்கிப்போயிருச்சோ ? உன்னிய இந்த மழயீரத்துல அனுப்பி வச்சிருக்கிறா. அய்யா பின்னாலயே வாரேன். நீ ஊட்டுக்குப்போ தாயி"
மகள் இவனையே கொஞ்சம்நேரம் பார்த்துவிட்டுத் திரும்பி வீட்டிற்குச் சென்றுவிட்டாள்.
கூனன், வலப்புறமாகத் திரும்பி பனங்காட்டிற்குள் நடந்தான். முள் குத்திய இடத்தில் நெருப்பாய் எரிந்தது. ஏற்கனவே காலில் ஆணி இருப்பதாக வைத்தியன் சொல்லியிருந்தான். ஆணியை நீக்குவது அத்தனை சுலபமில்லை. முரட்டு வைத்தியம் அது. வேலப்பனுக்கு அப்படித்தான் ஆனது. கால் ஆணியை நோண்டி அறுத்து பச்சிலைகள் அரைத்துவைத்து, கடைசியில் காலில் புரையேறி அழுகிப்போய் உயிரை விட்டான். கூனனின் மனைவி அதற்குப்பின் இவனை வைத்தியத்திற்கு வற்புறுத்தவில்லை.

பனையோலைக் குடிசையில் கூட்டம் அதிகமில்லை. பொழுது விழுந்தபின் தான் ஜனங்கள் வரும். பட்டப்பகலில் வந்த கூனனை கள்ளிறக்கி செவலை ஆச்சரியமாகப் பார்த்தான். இரண்டு கலயம் குடித்தபின் மெல்ல வீடுநோக்கிக் கிளம்பினான். கள்ளின் போதை உடலெங்கும் விஷம்போலப் பரவத் தொடங்கியிருந்தது.
மனைவி அருக்காணி குடிசைக்குள் அடுப்பை ஊதிக்கொண்டிருந்தாள். இவன் வந்ததும் சொன்னாள்."ஆண்டையூட்ல ஆளுட்டு கூப்புட்டாங்கய்யா"
"தெரியுந்தெரியும். வழியில ஆண்டையப் பார்த்துட்டுத்தான் வாரேன். போவனும்"
அவள் மெல்ல விசும்பி அழத்தொடங்கினாள். கூனன் அதட்டினான்.

"இப்பம் என்னாச்சுன்னு கண்ணக்கசக்குறியாம் ? அதான் வெவகாரமா எதுவும் நடக்கலில்ல. வாரக்கணக்கா ஒப்பாரி வச்சிக்கிட்டு. போயி சோலியப்பாரு. செலுவி மசிரெல்லாம் சிக்காக்கெடக்கு. இம்மத்தண்டி எண்ணவச்சிவுடு அருகு" என்றபடி கழுதையின் முதுகுச்சுமையை எடுத்துப் பிரித்து துணிகளைக் கயிற்றுக் கட்டிலில் வைத்தான். இந்தத் தூறலில் சனியன் காயாது என்று சலித்துக்கொண்டான்.
அவள் கண்களைத் துடைத்துக்கொண்டாள். விசும்பல் மட்டும் நிற்கவில்லை. கூனன் கிளம்பும்போது அருக்காணி மறுபடி எச்சரித்தாள்.
"நீரு ஏதும் கேட்டுப்புடாதீரய்யா. கருப்பங் கத தெரியுமில்ல"
"எல்லாந் தெரியும் பேசாம கெட. நா போயிட்டு இருட்டமின்ன வந்திடறேன்" என்று அங்கிருந்து நகர்ந்தான்.
வழியெங்கும் அவனுக்கு கருப்பனின் நினைவாகவே இருந்தது. அவனும் ஆண்டையிடம் தான் பண்ணையம் பார்த்துக்கொண்டிருந்தான். என்ன நடந்தது ஏது எனத் தெரியவில்லை. ஒருநாள் தோட்டத்து தென்னைமரத்தில் கட்டிவைத்து சவுக்கால் விளாசிக் கொண்டிருந்தார் ஆண்டை. அதன் பிறகு அவனை அதிகம் ஊருக்குள் பார்க்கவில்லை.
பக்கத்து மருதனூர் பண்ணையாரை குத்திக் கொன்றுவிட்டு தலைமறைவாகி விட்டான் என்று பேச்சாக இருந்தது.
ஒருமுறை பனங்காட்டில் கள்குடிக்க வந்தபோது பேசினான். உடன் இரண்டொரு பேர்கள் இருந்தார்கள். ஆண்டையின் பிறப்பு குறித்த கேவலமான வார்த்தைகளை உதிர்த்தான். இன்னும் கொஞ்சகாலத்தில் ஆண்டையின் கொட்டத்திற்கு முடிவுகட்டிவிடப் போவதாக சபதமிட்டான். புரட்சி விடியல் தோழர்கள் என்று என்னென்னவோ பேசியதெல்லாம் கூனனுக்குப் புரியவில்லை. கண்கள் சிவந்துபோய் கடைசியாக அவன் கூறியதுமட்டும் மறக்காமலிருக்கிறது.

"ஒம்பேரனுக்குப் பேரந் தாண்டியும் குண்டித்துணிக்கி ஆண்டை பேரங்கிட்டதான் நக்கிட்டுத் திரியப் போறடியேய்"
கூனன் ஆண்டையின் வீட்டை நெருங்கும்போதே பெரிய ஆண்டச்சி திண்ணையில் உட்கார்ந்தபடி மூக்கையனை ஏசிக்கொண்டிருந்தது தெரிந்தது.
ஆண்டையின் அம்மா. பொல்லாத கிழவி. வாய் அதிகம்.
நாய் குரைத்துக்கொண்டே வந்து இவன் காலை நக்கிவிட்டு நகர்ந்தது.
கூனனைக் கண்டதும் மூக்கையனிடம் கூறினாள்.
"இந்தா வந்திட்டாரு பாரு சீமத்தொர. நேத்து உச்சிக்கிச் சொல்லிவிட்டதுக்கு இன்னிக்கிப் பொழுதுக்கு வந்திருக்குறான். வெளக்கமாத்தை வெக்யவேண்டிய எடத்துல வெக்யாட்டி எப்புடி குப்பையக் கூட்டுமின்னேன்"
கூனன் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுமையாகத் தலைகுனிந்து நின்றிருந்தான். கிழவியின் குரல்கேட்டு ஆண்டச்சி வெளியே வந்தாள்.
கிழவியை சலித்துக்கொண்டு இவனை வீட்டின் பின்புறமாக வரச்சொல்லிச் சைகை செய்தாள். கொல்லைக்குச் செல்லும்போதே அவனுக்குப் புரிந்துவிட்டது. தன்னை எதற்காக அழைத்திருக்கிறார்கள் என்று. சுளுக்கு எடுப்பதற்காகத்தான் இருக்கும்.
சுளுக்கு எடுப்பதில் இவனளவு யாருமில்லை சுத்துப்பட்டில். உடலோடும் நரம்புகளை ஒரு தேர்ந்த வைத்தியனுக்கும் மேல் தெரிந்து வைத்திருப்பவன் கூனன். பின் பக்கத் திண்ணையில் கிண்ணியில் செக்கெண்ணை தயாராக இருந்தது. ஆண்டையின் மகள் காலை ஊனமுடியாமல் ஊனி நடந்து வந்தாள். வலியில் அவள் பல்லைக் கடிப்பதைப் பார்க்கச் சிரிப்பு வந்தது அவனுக்கு.
அவன் மகள் செல்வி வயதுதானிருக்கும் அந்தப்பெண்ணிற்கு.
"ம்மா ம்மா வேணாம்னு சொல்லும்மா வலி உசுரு போவுதும்மா" என்று அழுது அரற்றினாள்.
"ந்தா சும்மாக்கெட. அதெல்லாம் கூனன் பக்குவமா எடுத்து விட்டுருவான். ஏங்கூனா?"
இவன் பதிலேதும் கூறாமல் எண்ணையில் விரல்களை அமிழ்த்தி அந்த சிறுமியின் கெண்டைக்காலில் மெல்ல நீவத்தொடங்கினான். அவன் கண்கள் போதையில் சிவந்து எரியத் தொடங்கின. உள்ளே அருக்காணி நினைவு வந்தது.
அதுகூட பனங்காடு சென்றுவந்த ஒரு இரவுதான். ராந்தலைக்கூட எரிக்காமல் குடிசைக்குள் முசுக்குமுசுக்கென்று சப்தம் வந்தது. அவள்தான் அழுது கொண்டிருந்தாள்.
"ந்தா புள்ள.... அருகு. என்னாச்சுதாயி ஏன் அழுவுற?"

இவனைக் கட்டிக்கொண்டு இன்னும் வெடித்து அழுதாள். வெகுநேரம் பதிலே கூறவில்லை.
"ந்தா கேக்குறனில்ல? என்னத்துக்காம் வெளக்குவச்சநேரம் அழுது கிட்டிருக்குற?" என்று கடுமையாக மிரட்டியபின் தான் விஷயத்தைக் கூறினாள். ஆண்டை வீட்டில் அழுக்குடுப்பு எடுத்துவரச் சென்றிருந்தபோது, புழக்கடையில் அவளிடம் தவறாக நடக்க முயன்றிருந்ததும், எதேச்சையாக ஆண்டச்சி வந்ததால் தப்பித்தோம் பிழைத்தோமென வீட்டிற்கு ஓடிவந்து அழுது கொண்டிருக்கிறாள்.
அப்போதே கூனன் எரவானத்திலிருந்த அருவாளுடன் கிளம்பி விட்டான். அருக்காணிதான் என்னவெல்லாமோ கூறி அவனைச் சமாதானம் செய்து அமைதியாக்கினாள்.
ஊர்த்திருவிழாவில்கூட அவனுக்கு மரியாதை தரவில்லை. ஆண்டைக்குமேல் பேச ஊரில் ஆட்களுமில்லை.
ஆண்டச்சி சிரட்டையில் டீத்தண்ணி கொண்டுவந்து கூனனுக்கருகில் வைத்துவிட்டுச் சென்றாள். வாசலில் வண்டி வந்த சப்தமும், பெரிய ஆண்டச்சிக் கிழவியின் புலம்பல் குரலும் வந்தது. மல்பனியனும் பட்டாப்பட்டியுமாய் கிணற்றருகே வந்த ஆண்டை, பர்மாத்துண்டைக் கட்டி குளிக்கத் துவங்கினார்.
பேசாமல் அப்படியே பிடித்து அவரை கிணற்றுக்குள் தள்ளிவிட்டால் என்ன என்று தோன்றியது.
அவர் சவுக்காரத்தைத் தேய்த்துக் குளித்தபடியே கூனனிடம் சொன்னார்.
"போவயில ஆண்டச்சிக்கிட்ட ஒம்பொஞ்சாதி புள்ளைக்கி ரெண்டு மூணு பழந்துணி வாங்கிக்கிட்டுப்போ. ந்தா அவனுக்கு அத எடுத்துக்குடுத்துரு" என்று மனைவிக்கு உத்தரவிட்டார்.
கூனன் வேறு சிந்தனையிலிருந்தான். அந்த சிறுமியின் கால் நரம்புகளை முறுக்கிவிட்டு முடமாக்கிவிடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தான். ஆனால் செல்வியின் சிரித்த முகம் வந்து தடுத்தது.
கடைசி நீவலில் மளுக்கென்று சுளுக்கு நீங்கியது.
சிறுமி நம்பமுடியாத ஆச்சரியத்துடன் திரும்பத் திரும்பத் தன் கால்களை மகிழ்ச்சியுடன் அசைத்துக் கொண்டிருந்தாள்.
அவன் மெல்ல எழுந்து வீட்டிற்கு நடக்கத் தொடங்கினான்.
அடித்துப்பெய்யும் மழையில் ஆண்டையின் வீட்டைவிட்டு விலகி வெகுதூரம் வரும்வரை உரக்க அவன் பெயர்சொல்லி பின் தொடர்ந்துவந்தன குரல்கள்.

(குறிப்பு : கும்முட்டி என்பது கரித்தணல் கொண்டு பயன்படுத்தப்படும் கிராமிய அடுப்பு.)

# 4. பிறழ்

எங்கிருந்தோ அவனுக்குப் பரிச்சயமான பாடல் ஒன்று கசிந்துகொண்டிருந்தது. அவன் அந்த அறையைச் சுற்றிலும் பார்த்தான். அவன் கைகள் கட்டப் பட்டிருக்கவில்லை. உட்கார்ந்திருந்த நாற்காலி அவனது சிறிய அசைவிற்கெல்லாம் பெரிதாக முணகியது. அறையின் அதீத அமைதி அவனைச் சங்கடமூட்டியது. காலில் அணிந்திருந்த ஷூவினுள் சயனைடு இருக்கிறது. நிரம்ப தொல்லை கொடுத்தால் பட்டென்று அதை எடுத்துக் கடித்து விழுங்கிவிடலாம். மைக்ரோ கணங்களில் மரணம் நிச்சயம்.
ஏஸியின் குளிர் எந்த திசையிலிருந்து வருகிறதென்று கண்டுபிடிக்க இயலவில்லை அவனால். நிச்சயம் அவனைப் பலஜோடி கண்கள் பார்த்துக் கொண்டிருக்கும் என்பதை உணர்ந்திருக்கிறான்.

கிளக்கென்ற ஓசையுடன் கதவுதிறந்து அவர் உள்ளே நுழைந்தார். சவரம் செய்யப்பட்ட வழுவழு மாநிற முகத்தில் எவ்விதச் சலனங்களும் தென்படவில்லை. உன்னைப்போல ஆயிரம் பேரைப் பார்த்திருக்கிறேன் என்பது மாதிரியான பார்வையை வீசினார். அவர் கையிலிருந்த சிவந்த நிறக் கோப்பு கனமாக இருந்தது. ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவனையே உறுத்துப் பார்த்துக் கொண்டிருந்தார் அவர்.

"எங்க ரெக்கார்டுல உனக்கு மொத்தம் 28 பேர்கள் இருக்கு. எது உன்னோட ஒரிஜினல் பேர்?"

அவன் பேசாமல் உட்கார்ந்திருந்தான். அவர் கோப்பை மூடிவைத்தார்.

"சரி சொல்லு நீ எந்த இயக்கம்?”

"இயக்கம்லாம் இல்லாம ஒருத்தனால போராட முடியாதா சார்?"

"ஓ !! ரொம்ப நல்லது. அப்ப சொல்லு. இயக்கம் எதிலயும் இல்லன்னா பின்ன யாருக்காக இந்த ஜெலட்டின் ஸ்டிக்ஸ்லாம் வச்சிருக்க?”

"உங்கள நெனச்சு நா பரிதாபப்படுறேன். உங்ககிட்ட மாட்டிக்கிட்டதால எல்லாத்துக்கும் டான் டான்னு பதில் சொல்லிருவேன்னு எப்டி நம்பறீங்க?"

"ஏன்னா உனக்கு வேற ஆப்ஷனில்ல. உன்ன ஒரு நாள்ல புடிக்கல. ஏழு வருஷமா பிளான் பண்ணி கொஞ்சம் கொஞ்சமா நெருங்கிப்

பிடிச்சிருக்கோம்"

அவன் பலமாகச் சிரித்தான்.

"என்னைப் பிடிக்கிறதுக்குப் பண்ண முயற்சில கொஞ்சத்தை என் பக்கத்து நியாயத்தை யோசிக்கிறதுல செலவுபண்ணிருந்தா பல விஷயம் புரிஞ்சிருக்குமே"

அவர் பின்னால் கைகளை நீட்டி சோம்பல் முறித்துக்கொண்டார்.

"ஆங். அதுவும் செஞ்சோமே. காஷ்மீர்ல இருக்கிற நூத்துக்கணக்கான தீவிரவாத அமைப்புகளுக்கு இருக்கிற காரணந்தாம் ஒனக்கும் இருக்கப்போவுது. எல்லாருக்கும் அவங்கவங்களுக்கான காரணங்கள் இருக்கத்தான் செய்யிது"

"இல்ல. உங்க அடிப்படையே தப்பு. போராளிக்கும் தீவிரவாதிக்கும் வித்தியாசமே தெரியல உங்களுக்கு"

அவர் சலித்துக்கொண்டார்.

"வன்முறையில் இறங்கிறவங்க யாராயிருந்தாலும் தீவிரவாதிங்கதான் எங்க பார்வைல"

"அப்ப இந்திய எல்லையில நிக்கிற சோல்ஜர்ஸும் தீவிரவாதிங்கதான்னு சொல்லுங்க"

"நீ பேசறதுக்கு பயிற்சி எடுத்திருக்கன்னு நல்லாவே தெரியுது. எங்க கான்செப்ட் வெரி சிம்பிள். ஜனங்களோட அமைதியான வாழ்க்கைக்கு உத்திரவாதம் தரதும், அதுக்கு இடைஞ்சலா இருக்கிறவங்களைத் தடுக்கிறதும் தேவைப்பட்டா அழிக்கிறதும்தான் எங்க கடமை. எந்தக் குழப்பமும் இல்ல"

"ஓ ரொம்பப் பிரமாதம். அதனாலதான் நாட்ல கொலை கொள்ளை கற்பழிப்பு எதுவுமே இல்லாம சுபிட்சமா இருக்கு இல்லையா?"

" நீ பேச்சைத் திசை மாத்தினதுபோதும். விஷயத்துக்கு வா. இந்த ஜெலட்டின் ஸ்டிக்ஸை எங்கிருந்து யாருக்காகக் கொண்டுபோற?"

"தீபாவளி வருதில்லயா.. வீட்ல என் பையனுக்கு வேடிக்கை காட்றதுக்காக வாங்கிட்டுப் போறேன்"

அவர் முகம் இறுகியது.

"உங்கிட்டருந்து விஷயத்தை வாங்க முடியாதுன்னு நெனைக்கிறியா?"

" நிச்சயமா முடியாது. அதுக்காக நீங்க பயன்படுத்துற எல்லா முறைகள்லயும் பயிற்சி எடுத்திட்டுதான் வந்திருக்கேன்"

அவர் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு புன்னகை தவழும் முகத்துடன் கேட்டார்.

"உன் பையனுக்கு என்ன வயசு? அவன் உன்னத் தேடமாட்டானா ? வீட்டுக்குப் போக வேணாமா?"

"ஹஹ்ஹஹா பல வருஷமா அப்பாக்களுக்காகக் காத்திருக்கிற மகன்கள் நிறைய இருக்காங்க சார் எங்க ஊர்ல"

அவர் பேச்சை மாற்ற விரும்பினார்

"சரி நீ தனியான போராளி ஒத்துக்கிறோம். என்ன வேணும் ஒனக்கு?"

"காஷ்மீர்?"

"ஓ நீ பாகீஸ்தானா?"

அவன் இம்முறை விழாக் குறையாக சிரித்து வைத்தான். அவர் பொறுமையுடன் காத்திருந்தார்.

"சோ காஷ்மீர் வேணும்னு கேக்கிற ஒருத்தர் பாகிஸ்தானியாத்தான் இருக்கனும் இல்லையா?"

"இந்தியர்கள் யாரும் கேக்கமாட்டாங்க தம்பி. ஏன்னா கஷ்மீர் இருக்கிறதே இந்தியாலதான்"

"ஓ..! எந்த இந்தியா சார்?"

"புரியல"

"சுதந்திரத்துக்கு முன்னாடி ஒரு இந்தியா இருந்துச்சி. அப்பறமா ஒரு இந்தியா இருக்கிறதா நம்பப்படுது. எதைச் சொல்றீங்க?"

அவர் தீவிரமாக யோசித்தார். எந்த வழியில் சென்றாலும் கதவடைக்கிறான்.

"நல்லாவே பேசுற. அப்ப நீ யாரு?"

"நா காஷ்மீரி. அந்த மண்ணுலயே மூணு தலைமுறையா வாழுறோம்.

எங்களுக்குத்தான் காஷ்மீர் சொந்தம்"

அவர் ஓரளவு பாயிண்டை பிடித்துவிட்டதுபோல மகிழ்ந்தார்.

"ஆங் கரெக்ட்தான். தமிழ்நாடு தமிழனுக்கு சொந்தம். ஆந்திரா தெலுங்கனுக்கு சொந்தம். கேரளா மலையாளத்தானுக்கு சொந்தம். இப்டியே எல்லாரும் பிச்சிக்கிட்டு போயிட்டா இந்தியான்னு சொல்லிக்க என்ன மிஞ்சும்னு நெனைக்கிற?"

"எதுக்கு மிஞ்சணும்னு கேக்குறேன். ஏன் எங்க ஊருமேல உங்களுக்கு இவ்ளோ அக்கறை? பட்ஜட் நிதில காஷ்மீருக்காக நீங்க ஒதுக்குற அமவுண்ட் எதுக்கு? எதுக்காக எங்க ஊர்ல இவ்ளோ போலீஸ்காரங்க?"

" சோ உன்னை நீ ஒரு காஷ்மீரியனாத்தான் அடையாளப்படுத்திக்கிற ? இந்தியனா இல்ல அப்டித்தானே?"

" வெள்ளைக்காரன் வந்து அடிமைப்படுத்தலன்னா, இந்த நிமிஷம் வரை இந்தியான்னே ஒண்ணு கெடையாது சார்"

"இந்தியால எத்தனையோ பின் தங்கின பிரதேசங்கள் இருக்கு. ஒண்ணுல இருந்து வரதை இன்னொண்ணுக்குன்னு எல்லாத்தையும் சரி சமமா பிரிச்சு நாட்டைக் காப்பாத்திட்டிருக்கோம். வளமான பிரதேசங்கள் எல்லாம் தனியா பிரிஞ்சு போயிட்டா, கஷ்டப்படுற பிரதேசங்களோட கதி என்னாவும்னு யோசிச்சியா?"

" சோ இந்தியாங்கிற நாடு ஒரு கட்டப்பஞ்சாயது வேலையத்தான் பார்க்குது இல்லையா?"

"அப்டியில்ல"

"நா என்ன கேக்குறேன். என் பிரதேசத்தின் வளங்களை எடுத்து அடுத்தவங்களுக்குப் பகிர்ந்து குடுக்க, உங்களுக்கு என்ன அதிகாரம் இருக்கு ? அப்டியே வச்சிக்கிட்டாலும் பாரபட்சம் இல்லாம எல்லாருக்கும் சரிசமமாத்தான் பகிர்ந்து குடுக்கிறீங்கன்னு உறுதியா சொல்லமுடியுமா உங்களால?"

இப்போது அவர்கள் இருவரும் எழுந்து தங்கள் இடத்தை மாற்றிக்கொண்டார்கள். அவன் இடத்தில் அவர் உட்கார்ந்திருக்க, அவன் கேள்விகளை தொடங்கினான்..

"நிலா ஏன் வெள்ளையா இருக்கு?"

" அது சூரியனோட வெளிச்சத்தை கடன் வாங்கினதால வெள்ளையா தெரியுது"

"சபாஷ் !! சரி அப்ப நிலா ஏன் வட்டமா இருக்கு?"

"இல்ல உங்க பார்வைல தப்பிருக்கு. அது சதுரமாத்தான் இருக்கு"

"இதுக்கு என்ன நிரூபணம் இருக்கு. கண்ல பார்த்தாலே தெரியலையா நிலா வட்டம்னு?"

" இல்ல. என் கண்ணுக்கு அது சதுரமாத்தான் தெரியுது"

"உனக்குப் பின்னால சுவர்ல ஊறுதே அது என்னன்னு தெரியுமா?"

அவர் திரும்பிப் பார்த்துவிட்டுச் சொன்னார்.

" தெரியும். அது ஒரு குட்டி டைனோசர்"

"இல்ல அது ஒரு பல்லிதான். எனக்கு உன் மனநிலைமேல சந்தேகமா இருக்கு"

அவர் சற்று நேரம் சும்மாயிருந்தார்.

"இந்த உலகம் மெஜாரிட்டி முட்டாள்களால் ஆனது. நூறு முட்டாள்கள் சேர்ந்து எதையாவது சொன்னா கண்ணமூடிக்கிட்டு நம்புறதும், அதை நிஜம்னு ஏத்துக்கிறதும் யதார்த்தம்"

"நிலாவுக்கு போயிட்டு வந்த நீல் ஆம்ஸ்ட்ராங் பொய் சொன்னாருன்னு சொல்லுவியா?"

" ஏன் சொல்லக்கூடாது. நீங்க நேர்ல போயி நிலாவை பார்த்துட்டு வராதவரை நீல் ஆம்ஸ்ட்ராங் சொன்னதை பொய்யின்னு சொல்ற உரிமை உங்களுக்கு இருக்கு"

"ஆனா நீல் ஆம்ஸ்ட்ராங் போயிட்டு வந்திருக்காருப்பா"

"எனக்கு அதில் நம்பிக்கை இல்லன்னு சொல்றேன். அது எல்லாமே அமெரிக்காவோட கண்துடைப்பு வேலைன்னு சொல்றேன்"

"சரி சொல்லு எதுக்காக ஜெலட்டின் ஸ்டிக்ஸ் வச்சிக்கிட்ருக்குற?"

" எனக்கு பூமிய சுத்தம் பண்ணனும். ரொம்ப குப்பையா இருக்கு"

"அதுக்காக அப்பாவி ஜனங்களை கொல்றது தப்பில்லையா?"

மறுபடி அவர்கள் இருவரும் இடம் மாறிக்கொண்டார்கள். அவர் சொல்லவேண்டிய இடத்திலிருந்து அவன் பதில் சொல்ல ஆரம்பித்தான்.

" கொத்துக் கொத்தா எங்கூரு ஜனங்க செத்தப்ப அந்த அப்பாவிங்க சும்மாதானே இருந்தாங்க. பேப்பர்ல படிக்கிற ஒரு சாதாரண செய்தியாதானே அவங்களுக்கு அது இருந்திச்சு?"

"நீ ஒண்ணைப் புரிஞ்சுக்கணும். எந்த நியாய தர்மப்படி பார்த்தாலும் காஷ்மீர் இந்தியாக்குத்தான் சொந்தம். காஷ்மீர் வரலாறு படிச்சதில்லையா நீ?"

" ஆட்சியில இருந்த யாரோ ஒரு முட்டாள் செஞ்ச குழப்பமான கடைசி நேர முடிவை மட்டும் சாதகமா வச்சிக்கிட்டு வாதாடினா என்ன செய்யமுடியும்?"

அவர் மவுனமாக இருந்தார்.

"நீங்க எப்பவாச்சும் சாவைப் பத்தி யோசிச்சிருக்கீங்களா ? ஒவ்வொரு நாளும் வெளிய தெருவில இறங்குறப்ப, இன்னிக்கு என்னை பத்திரமா வீட்டுக்கு கொண்டுவந்து சேர்த்திரு கடவுளேன்னு வேண்டிக்கிட்ட அனுபவம் இருக்கா உங்களுக்கு?"

" சரிப்பா. உனக்கான காரணங்கள் நியாயமா இருந்தாலும், போராடுற வழிமுறைன்னு ஒண்ணு இருக்கில்லையா ? அறவழியில் அஹிம்சை வழியில் முயற்சி செய்யலாமே?"

"அஹிம்சையைத் தேர்ந்தெடுக்கிறவங்க ரெண்டே விதம்தான் சார். ஒண்ணு, ரொம்பத் தொலைநோக்குப் பார்வையோட தீவிரமான அனுபவ அறிவுல வரது. இன்னொன்னு பயத்துல வரது. நீங்க எங்ககிட்ட விரும்பறது ரெண்டாவது வகை அஹிம்சையைத்தான். துரதிர்ஷ்டவசமா ரெண்டையுமே நாங்க கடந்து வந்துட்டோம்"

கொஞ்ச நேரம் இருவரும் பேசிக்கொள்ளவில்லை. அறையின் குழல் விளக்கிலிருந்து ஒருவித உர்ர்ர்ர் சப்தம் வந்துகொண்டிருந்தது. கதவைத் திறந்துகொண்டு ஒரு பெண் உள்ளே நுழைந்தாள். அவர்கள் இருவரும் ஒரே பக்கமாக நெருங்கி உட்கார்ந்துகொள்ள, சட்டென்று மின்சாரம் நின்று அறை இருளில் மூழ்கியது.

எவனோ ஒருவன் தீப்பந்தத்தை எடுத்துவந்து ஒரு தூண் பிளவில் சொருகி வைத்தான். அந்த மண்டபம் இப்போது தீப்பந்த வெளிச்சத்தில் நெளிந்தாடியது. மற்ற தூண்களின் நிழல்கள் அச்சுறுத்தும்படி இருந்தன.

அந்தப்பெண் மிக வசீகரமான குரலில் கேட்டாள்.

"யார் நீங்கள்?”

" இது ரொம்பக் கஷ்டமான கேள்வி. அதோட இந்த கேள்விய நாந்தான் கேக்கணும். நீ யாரு பொண்ணு?”

"நான் வீரராஜேந்திர சோழனின் இரண்டாம் மகள். சோழப்படையின் உப சேனாதிபதி. இப்பொழுது நீங்கள் யாரென்று கூறுங்கள்"

அவரும் அவனும் ஒருவரையொருவர் வினோதமாக பார்த்துக்கொண்டார்கள். அவன் சொன்னான்,

"இதுல ஏதோ குழப்பம் நடந்திருக்கு. நீங்க அல்லது நாங்க தப்பான இடத்துல சந்திச்சிருக்கோம்"

அந்தபெண் இருவரையும் மாறிமாறிப் பார்த்தாள். பிறகு கைகளால் சமிக்ஞை செய்ய இருளிலிருந்து ஒருவன் கசையுடன் வந்தான். விளார் விளாராக இருந்தது அந்த கசை. வந்தவன் எவ்விதக் கேள்விகளோ குழப்பங்களோ இன்றி அவர்கள் இருவரையும் கசையால் விளாசினான்.

அவர்கள் வெளியிட்ட கூச்சலில் மண்டபத்திலிருந்த வௌவால்கள் சில சடசடத்துப் பறந்தன. அவள் சைகை செய்ததும் கசையடிக்காரன் மறுபடி இருளுக்குள் சென்று மறைந்தான். அவர்கள் இருவர் உடலிலும் திட்டுத்திட்டாக ரத்தம் வழிந்துகொண்டிருந்தது. அவர்கள் உதடுகள் நடுங்கிக்கொண்டிருந்தன. அவர் அவனைப்பார்த்துப் படபடப்புடன் சத்தமிட்டார்.

"நீ ஒரு முட்டாள். இது எல்லாமே உன்னால்தான்"

"ஏன் நீங்க எதுவுமே செய்யலியா?"

"போதும் நிறுத்துங்கள்" என்றபடி ஒரு ஓலைச்சுருளை எடுத்து அவர்களிடம் கொடுத்தாள். அவர்கள் இருவரும் குழம்பிப்போய் அதை வாங்கிப்பார்த்தார்கள். அதில் புரிந்துகொள்ள முடியாத மொழியில் என்னவோ எழுதியிருந்தது.

"எங்கிருந்து வருகிறீர்கள்?"

இப்போது அவன் தான் பதிலளித்தான்.

"பாரும்மா என் ஊரு காஷ்மீர்"

"எங்கிருக்கிறது அது?"

அவர்கள் மறுபடியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். அவர் சொன்னார்,

"இந்தியாலதாம்மா இருக்கு?"

அவள் தலைமுடியை பிய்த்துக்கொள்வதுபோல என்னவோ செய்தாள்.

"அது எங்கே இருக்கிறது?" என்றாள்.

அவன் வினோதமாகச் சிரிக்கத் தொடங்கினான். அவரும் அதில் கலந்துகொண்டார்.

அவள் மறுபடி எதையோ பேசத் தொடங்க, மண்டபம் முழுதும் ஒருவித பயங்கரமான நாராச ஒலி கிளம்பியது. கொஞ்சம் கொஞ்சமாய் ஒலியின் அளவு கூடி தாங்கமுடியாத அளவிற்குச் சென்றது. அவர்கள் காதுகளிலிருந்து ரத்தம் வழியத்தொடங்கியது. இருளில் சிலர் பொத்துப்பொத்தென்று விழும் ஓசை கேட்டது. மெல்லமெல்ல மண்டபத்தின் ஒவ்வொரு தூணாக சாய்ந்துவிழத் தொடங்கியது.

நிறைய மனிதர்களின் குரல்களும் கூச்சல் குழப்பங்களுமாக இருந்தது. கடைசியாக ஒரு பெரிய தூண் விழுந்ததில் அந்தப்பெண்ணும் அவரும் அவனும் மாட்டிக்கொண்டார்கள். தூணை அவர்களால் அசைக்கமுடியவில்லை. மூவர் தோள்பகுதியிலும் சுரீரென்றது.

எங்கோ சினிமா பாடல் ரிங் டோன் ஒன்று திரும்பத்திரும்ப ஒலித்துக் கொண்டிருந்தது. அது அவளுக்கு மிகவும் பிடித்த பாடல். அந்தப் படத்தின் நினைவுகூட அவளுக்கு இன்னும் மறக்கவில்லை. நெகமத்தின் ஒரு பழைய தியேட்டரில் தன் அம்மாவுடன் அந்தப் படத்தைப் பார்த்திருக்கிறாள். அம்மாவை நினைக்கும்போதெல்லாம் தவறாமல் அழுகையும் சேர்ந்தே வரும் அவளுக்கு.

தனது சடங்கெல்லாம் கடந்தபின்பு தான் அவளுக்கு அம்மாவின் தொழில் பற்றியெல்லாம் முழுதாகத் தெரிந்தது. தியேட்டரில் தன்னை விட்டுவிட்டு அடிக்கடி அவள் காணாமல் போவதன் ரகசியங்கள் உடைந்தன.

" இப்ப எப்டி இருக்கு மல்லிகா?" என்று கேட்டவளை அவள் புரியாமல் பார்த்தாள்.

சோழ இளவரசி எதற்குத் தன்னை மல்லிகா என்று அழைக்கிறாள் எனக்

குழம்பினாள்.

சுவரில் பல்லி ட்ரட் ட்ரட் ட்ரட் என்று கத்திக்கொண்டிருந்தது.
பின்னணியில் அந்த சினிமாப் பாட்டு இன்னும்
ஒலித்துக்கொண்டிருந்தது.

# 5. அருவம்

"புரபசர் இது ஒர்க்கவுட் ஆகுமா?"

"பாரு சிவா... ஏன் பயப்படுற ? இது ஒண்ணும் பெரிய ரிஸ்கேயில்ல. ஒரு ஆளை அவனுக்குத்தெரியாம வீடியோ மூலம் கண்காணிக்கப்போற அவ்ளோதான்"

"ஆனா இத அவன் வாங்கிக்குவானா?”

"அது உன் சாமர்த்தியத்துல இருக்குப்பா. எனக்கு உம்மேல நம்பிக்கை இருக்கு.”

* * *

உண்மையில் இப்படி நடக்குமென்று சண்முகம் நினைத்துக் கூடப் பார்க்கவில்லை. எல்லாம் அந்த மந்திரவாதியின் வேலையாகத்தான் இருக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டான்.

ஆமாம், அவனை அப்படி அழைப்பதுதான் சரியென்று தோன்றியது அவனுக்கு. வெறும் பேச்சுக்கு உதார் விடுகிறான் அப்படியெல்லாம் எதுவும் நிகழ்ந்துவிடாதென்றுதான் நினைத்திருந்தான். ஆனால் அவன் கூறியதுபோலவே நிகழ்ந்துவிட்டது.

அவன் கொடுத்த அந்த மருந்தை உட்கொண்டது தவறோ என்றும் யோசிக்கத் துவங்கினான். இதுவிஷயம் இப்படியாகிப்போனதற்கு தான்தான் முழுக் காரணம் என்பதில் அவனுக்குத் துளியும் சந்தேகமில்லை. இருந்தாலும் தனது இந்த மாற்றம் மிகுந்த உளவியல் சிக்கலுக்கு உள்ளாக்கிவிட்டது சண்முகத்தை. விஷயம் இதுதான். அவன் இப்பொழுது உருவமற்றவனாகிவிட்டான்.

ஊரெல்லாம் வாங்கி வைத்த கடனுக்கு வட்டிகூடக் கொடுக்கவியலாத நிலையில் ஒரு பைத்தியக்காரனைப்போல எங்கெங்கோ சுற்றிக் கொண்டிருந்தான். மனைவி பிள்ளையையெல்லாம் மாமியார் வீட்டில் விட்டுவிட்டு ஊரூராக அலைந்துகொண்டிருந்தான். அப்படித்தான் இருதினங்கள் முன்பு வெள்ளியங்கிரிமலை அடிவாரத்தில் யாரோ ஒரு புண்ணியவான் கொடுத்த வாழைப்பழத்தைத் தின்றுகொண்டிருந்தபோது அவனைக்கண்டான்.

அவனொரு மந்திரவாதி என்பதற்கான எவ்வித முகாந்திரங்களும் காணப்படவில்லை. நீலநிற லெவி ஜீன்சும் வெள்ளையில் குர்தாவுமாக ஒரு பிரயாணியைப்போலதான் இருந்தான். கழுத்திலொரு கேமராகூட வைத்திருந்தான். என்ன நினைத்தானோ இவனருகே வந்து அமர்ந்து பேச்சுக் கொடுத்தான். இவனும் சாதாரணமாக அவனுடன் பேச, ஐந்து நிமிடங்களில் இவன் ஜாதகம் முழுமையும் தெரிந்துகொண்டான்.

அவனிடம் ஒரு வசீகரமிருந்தது. அவன் என்ன கேட்டாலும் சொல்லலாம், என்ன சொன்னாலும் செய்யலாம் என்னும்படியான வசீகரம் அது. பிறகு அவன் தனது ஜீன்ஸிலிருந்து ஒரு பாலித்தீன் உறையை எடுத்து, அதனுள்ளிருந்து ஒரு உருண்டையை எடுத்தான். நசுங்கிய உருண்டை வடிவிலான அது கம்மர்கட் போலிருந்தது. பிறகு அதை சண்முகத்தின் கையில் திணித்துச் சாப்பிடச்சொன்னான்.

நாட்கணக்காக எங்கு என்ன கிடைக்கிறதோ அதைத் தின்று உயிரைப் பிடித்துக்கொள்ளப் பழகிய சண்முகமும் மறுக்காமல் வாங்கிக்கொண்டான் ஆனால், சாப்பிடவில்லை. அவனுக்குள் ஏதோ ஒரு பட்சி கூவியது. தனது அழுக்கு வேட்டியில், கை வைத்த டீசர்ட்டில் பாக்கெட்கள்கூட இல்லையென்பதும், மயக்க மருந்து கொடுத்துத் திருடிச்செல்ல தன்னிடம் எதுவுமே இல்லையென்பதும் அவனறிந்த ஒன்றுதான்.

ஆனால், இப்பொழுது தான் என்னென்னவோ நிகழ்கிறதே. இருக்கிற கிட்னியை உருவிக் கொண்டுவிட்டால்கூட இழப்புத்தானே என்னும் பயத்தில்தான் அவன் கொடுத்த அந்த உருண்டைமிட்டாயை சாப்பிடாமல் யோசித்துக் கொண்டிருந்தான்.

குர்தாக்காரன் சிரித்தான்.

"எனக்கு உத்தரவு வந்திருக்குப்பா.. அதனாலதான் உன்னத்தேடி வந்தேன். இது உனக்காகவே செஞ்ச மூலிகை உருண்டை. தைரியமா சாப்பிடு. நீ கேட்டது கிடைக்கும்" என்றான்.

சண்முகத்திற்கு மகா குழப்பம். என்னவோ உத்தரவென்கிறான். மூலிகை உருண்டையென்கிறான். கேட்டது கிடைக்குமென்கிறான். யாரிவன் ? என்னை எப்படித் தெரியும் இவனுக்கு ? தெரியுமெனில் எதற்காக இத்தனை நேரம் என்னுடன் பேசவேண்டும் ? நேரடியாகவே அதைக் கொடுத்திருக்கலாமே என்றெல்லாம் எண்ணினான்.

"நீ என்ன யோசிக்கிறன்னு எனக்குப் புரியுது. சில விஷயங்களை

விளக்கிறது ரொம்ப கஷ்டம். இன்னும் இந்த உலகத்தில விளக்கப்படாத பலகோடி விஷயங்கள்ல ஒண்ணுதான் நம்ம சந்திப்பு. நீதான் நீயான்னு உறுதி பண்ணிக்கத்தான் இவ்ளோ நேரம் உங்கூடப்பேசினேன். உன் பிரச்சனைகள் எல்லாம் எனக்குச் சொல்லிட்டாங்க. அதுக்கான மருந்துதான் அது. மாற்றம் வேனும்னா சாப்பிடு. அப்பறம் உன்னிஷ்டம்" என்றான்.

சண்முகம் செய்வதறியாத திகைப்பிலிருந்தான்.

"நீங்க சொல்றது ஒண்ணும் எனக்குப் புரியலிங்க. என் பிரச்சினைகள் உங்களுக்கு எப்புடித்தெரியும்? யாரு சொன்னாங்க? இது என்ன முட்டாய்? இதச் சாப்பிட்டா என்னாவும்?"

" பாருப்பா நா வந்து... என்னை ஒரு போஸ்ட்மேன்னு நெனச்சுக்கோ. இதைக் குடுக்கவேண்டியது மட்டுந்தான் என் வேலை. இது உன் பிரச்சனைகளை தீர்க்கிற மருந்துன்னு சொல்லித்தான் குடுக்கச்சொன்னாங்க. நீதான் நா யார் கண்ணுக்கும் தெரியாம மறைஞ்சி போயிரணும்னு கேட்டியாமே?"

"சரிங்க அதுதான் யாருன்னு கேக்குறேன்?"

"இதுக்கு நா பதில் சொன்னா நீ நம்பமாட்டப்பா. பேசாம சாப்பிடு. இல்ல... உன் விருப்பம். என் வேலை முடிஞ்சது நா கௌம்புறேன்"

சண்முகம் கையிலிருந்த உருண்டையையே பார்த்துக் கொண்டிருந்தான். எல்லாம் பெரிய புதிராக இருக்கிறதே என்று நினைத்தபடி அவனிடம் கேட்டான்,

"அப்ப இதச்சாப்பிட்டா நா யார் கண்ணுக்கும் தெரியாம மறைஞ்சிருவனா?"

" ஆமா?"

சண்முகத்திற்குச் சிரிப்பு வந்துவிட்டது. அவன் ஏதும் சங்கடப்பட்டுவிடக் கூடாதென்று மெலிதாக ஒரு புன்னகையை மட்டும் வெளிப்படுத்தினான்.

"நீ மொத நம்பமாட்டான்னும் அவங்க சொன்னாங்க"

"நீங்களே சொல்லுங்க.. உங்ககிட்ட யாராச்சும் வந்து இப்டி சொன்னா நீங்க மொத நம்புவீங்களா?"

அவன் சிலகணங்கள் சண்முகத்தையே உற்றுப்பார்த்தான். பிறகு சொன்னான்.

"நாம நம்புறோமா இல்லையான்றதில்ல விஷயம். இது நமக்குத்தேவையா இல்லையா அவ்ளோதான். உனக்கு வேணும்னா நீ சாப்பிடலாம். இல்ல தூக்கிக்கூட போட்ரலாம். உன் விருப்பம்தான்"

சண்முகத்திற்கு தனது கடன் தொல்லைகள் நினைவிற்கு வர சட்டென்று அந்த உருண்டையை வாயிலிட்டு மென்றான். சிறுவயதில் உண்ட கஷாயத்தின் சுவையை ஒத்திருந்தது அது. நடுவில் ஒரு பிசிறு மட்டும் கண்ணாடியையும் பிளாஸ்டிக்கையும் மென்றதுபோல கடுக்மொடுக்கென்றிருந்தது. முழுக்க விழுங்கிவிட்டு அவனிடம் கேலியாகக் கேட்டான்.

"நா இப்ப உங்க பார்வையிலருந்து மறைஞ்சிட்டனா?"

அவன் சிரித்தான்.

" இந்த மூலிகை உன் உடம்புல முழுசா கரைஞ்சதும்தான் நீ மறைவ. எப்ப நீ பேசுறப்ப எதிராளி உன் குரலை மட்டும் கேட்டுட்டு ஆளைக்காணமேன்னு தேடுறாப்ல தெரியுதோ, அப்பவே உன் உருவம் மறைஞ்சிருச்சின்னு புரிஞ்சுக்க, அதுக்கப்பறம் யார்கூடவும் பேசாத. இந்த மூலிகையோட வீரியம் பதினஞ்சு நாள்வரைதான் இருக்கும். அதுக்கப்பறம் நீ பழையபடி உன் உருவத்துக்கு மாறிடுவ" எனக் கூறியபடியே அவன் கிளம்பத் தயாரானான்.

"ஏங்க யாரு இதை உங்ககிட்ட குடுத்துவிட்டாங்கன்னு சொல்லலியே கடைசிவரை"

அவன் சில அடிகள் நடந்துவிட்டுத் திரும்பிப்பார்த்து சண்முகத்திடம் சொன்னான்.

"கடவுள்"

சண்முகத்திற்கு அழுவதா சிரிப்பதா என்றே தெரியவில்லை. இருக்கிற பிரச்சனைகளில் இது என்னடா தமாஷ் என்றெண்ணியபடி, சக பிச்சைக்காரர்களுடன் சென்று வேட்டியைக்கழற்றிப் போர்த்திக்கொண்டு படுத்துவிட்டான். காலை கோவில்மணி ஓசை கேட்டு கண்விழித்தபோது கோவில் பணியாளன் வந்து எழுந்துபோகச்சொல்லி விரட்டியபோது, அப்படியொன்றும் தான் மறைந்துபோய்விடவில்லை. வந்தவன் ஏதோ தன்னுடன்

விளையாடிவிட்டுச் சென்றிருக்கிறான் என்றே நம்பினான்.

சூரியன் மெல்ல மேலேறி வெளிச்சமிட்டபோது ஒருவர் டிபன் பொட்டலத்தை விநியோகித்தபடியே வந்தவர், தனக்கு மட்டும் கொடுக்காமல் சென்றபோதுதான் தான் அவர் கண்ணுக்குத் தெரியாமல் போய்விட்டதை நம்பமுடியாத வியப்புடன் உணர்ந்துகொண்டான். சோதித்துப்பார்ப்பதற்காக அருகிலுள்ள டீக்கடைக்குச்சென்று டீ கேட்க, குரலை மட்டும் கேட்ட டீ மாஸ்டர் ஆளை காணவில்லையென்று சுற்றுமுற்றும் தேடியதில் விஷயத்தை உறுதிசெய்துகொண்டான்.

ஒருபக்கம் அவனுக்கு மகிழ்ச்சியாகக்கூட இருந்தது. இனி கடன்காரர்கள் எதிரில் வந்தால் மூத்திரச்சந்துகளில் மூக்கைப்பிடித்துக்கொண்டு ஒளிந்துகொள்ளத் தேவையில்லை என்பது அவன் மகிழ்ச்சிகளில் முதன்மையானது. பேருந்தில் ஏறி ஜம்மென்று உட்கார்ந்து ஊர்நோக்கிப் பயணப்பட்டான். சுற்றிலுமுள்ள மனிதர்கள் யாருக்கும் கிடைக்காத அரிய சாத்தியமொன்று தனக்குக் கிடைத்திருப்பதாகவே உணர்ந்தான். ஆனால் வீட்டுக்குச்சென்றபோதுதான் சிக்கலை உணர்ந்தான்.

கதவைத்தட்டிக் காத்திருக்க, வெளிவந்த மனைவி இவனது உருவமற்ற குரலைமட்டும் கேட்டுத் திடுக்கிட்டாள். பிள்ளை அலறியடித்து அழத் துவங்கினான். அவன் என்னகூறியும் கேட்டுக்கொள்ள அவள் தயாராக இல்லை. வேறுவழியின்றி கடற்கரையில் சென்று படுத்துக்கொண்டான். இப்படியாகவே மூன்று நாட்களைக் கடத்திவிட்டான். ஆனால் பசிதான் அவனது பெரும் பிரச்சனையாக இருந்தது. கடைக்குச்சென்று பலகாரத்தைக் கையிலெடுக்க, பலகாரம் அந்தரத்தில் பறப்பதைக்கண்டு பேயறைந்ததுபோல கடைக்காரன் ஓடத் துவங்கியதில் பசிபோய் பயம் வந்துவிட்டது சண்முகத்திற்கு.

ஒருவேளை மறுபடி தனக்கு உருவம் திரும்பிவராவிட்டால் என்ன செய்வதெனும் பயத்துடன் கூடவே மற்றொரு சந்தேகமும் தோன்றியது. இவையெல்லாம் தனது நினைவுகளின் பிறழ்வுகளோ ? உண்மையில் தான் இறந்துவிட்டோமோ ? அதனால்தான் மற்றவர் கண்களுக்கு நாம் தெரியவில்லையோ என்றெல்லாம் பயந்துநடுங்கினான். ஒரு கட்டத்தில் இந்தத் தற்காலிக மாற்றத்தால் எவ்விதப் பயனும் இல்லையென்பதையும் உணர்ந்துகொண்டான்.

தெருக்குழாய்யின் தண்ணீரை மட்டும் குடித்தபடி, தினசரி எங்கேனும் சுற்றிவிட்டு, இருட்டியதும் கடற்கரையில் சென்று படுத்துக்கொள்வதை வாடிக்கையாக வைத்திருந்தான். போலீஸ்காரர் ஒருவர் லட்டியால்

இவன்மீது மெலிதாகத் தட்டியெழுப்பி விசாரித்த நாளில்தான் தான் மறுபடிப் பழைய உருவத்திற்கு வந்துவிட்டதை உணர்ந்து, சற்றே நிம்மதியும், தனது யதார்த்த வாழ்வுகுறித்த அச்சுறுத்தல்களும் தோன்றின. சண்முகம் மெல்ல அவரிடம் சமாதானம் கூறிவிட்டு வீடுநோக்கி நடந்தான்.

* * *

புரபசர் ஜான் மேத்யூ ஒரு வெற்றிப் புன்னகையுடன் தனக்கு முன்னிருந்த லேப்டாப்பையே கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தார். அதில் சண்முகம் வெள்கியங்கிரி மலை அடிவாரத்தில் பாவமாக உட்கார்ந்திருப்பதும், அலைந்து கொண்டிருப்பதும், சட்டென்று கண்ணுக்குத்தெரியாமல் அவன் மறைந்துபோவதும் துல்லியமாக பதிவாகியிருந்தது.

அருகிலிருந்த சிவா ஆச்சரியம் விலகாமல் அவரையே கவனித்துக்கொண்டிருந்தான்.

"எப்டி சார் இது பாஸிபிள்?”

புரபசர் சிரித்தார்.

" இந்த உலகத்துல எல்லாமே பாஸிபிள்தான் சிவா.. இட்ஸ் டிப்பென்ஸ் அபவுட் டைம்"

"இல்லசார் நா அதைக்கேக்கல. டெக்னிக்கலா எப்டீன்னு"....?

புரபசர் அவனை உட்கார்ந்துகொள்ளச்சொன்னார்.

"சிவா... பார்க்கிறதுன்னா என்னன்னு நெனைக்கிற ?
இப்ப நாம கண்ணால ஒண்ணை பார்க்குறோம். ஆனா. நாம பார்க்கிற பொருளுக்கும் நம்ம பார்வைக்கும் நடுவுல ஏகப்பட்ட விஷயங்கள் இருக்கு. நம்ம பார்வை ஒரு பொருள் மேல பட்டு, எதிரொளிச்சு, அது திரும்ப நம்ம மூளைக்குப்போயி, அந்த செய்தி மறுபடி மூளையோட இன்னொரு பகுதிக்கு அதைச்சொல்லி, அட அந்தப்பொண்ணு செம ஃபிகரு அப்டீன்ற எண்ணத்தை உருவாக்குது. இதுல ரொம்ப முக்கியமானது நடுல இருக்கிற வேவ்ஸ்... அதாவது அலைகள். உலகத்துல எல்லா கம்யூனிகேஷனுக்கும் ஒரு ஃப்ரீக்வென்ஸி இருக்கு. அதுமாதிரி நம்ம பார்க்கிறதுக்கும் ஒருவித ஃப்ரீக்வென்ஸி இருக்கு”

சிவா 'பே' என்பதுபோல் அவர் பேசுவதைக்

கவனித்துக்கொண்டிருந்தான். புரிவதுபோலவும் புரியாததுபோலவும் குழப்பமாக இருந்தது.

"இப்ப இந்த மெட்டீரியல் மூலமா நா செஞ்சிருக்கிறது என்னன்னா, இதை ஒடம்புக்குள்ள அனுப்புறது மூலமா ஒரு ஆர்ட்டிஃபீஷியல் கெமிக்கல்
ரியாக்‌ஷனை உருவாக்குறேன். அது என்ன செய்யும்னா, எல்லாரும் பார்க்கிறதுக்கான ஃப்ரீக்வென்ஸியை கலைச்சு, இருக்கிற ஒண்ணோட இருப்பை பார்க்க முடியாம செய்யுது. ஃபார் எக்ஸாம்பிள் இதை இந்த பேப்பர் வெய்ட்ல அப்ளை பண்ணா, நம்ம கண்ணுக்கு அது தெரியாது, பட் அது அங்கதான் இருக்கு"

"இருந்தாலும் ஒரு மனுஷன் முழுசா இந்த உலகத்தோட பார்வைலருந்து மறைஞ்சுபோறதுன்றது.... இட்ஸ் ரியலி அமேஸிங்"..

"அப்டிலாம் இல்ல சிவா... அந்தக் காலத்திலயே பல சித்தர்கள் இந்த மாதிரி ஏகப்பட்ட வித்தையை செய்திருக்காங்க.. அஷ்டமா சித்திகள் அப்டீங்குற கான்செப்ட்ல, கூடுவிட்டு கூடு பாயுறது, வெயிட்டாவும், வெயிட்லெஸ்ஸாவும் ஆவுறது, இந்தமாதிரி பல விஷயங்கள்.. என்ன, அவங்க அதை வேறமாதிரியான வழிமுறைகள்ல செஞ்சாங்க. அதுக்கு ஆதாரமும் இல்ல இப்ப. பட் நம்முளுது அப்டியில்ல. பாரு நீ ஷூட் பண்ண இந்த வீடியோ எவிடன்ஸே போதும். இந்த வருஷத்தோட, ஏன் இந்த நூற்றாண்டோட சிறந்த கண்டுபிடிப்பே இதுவாத்தான் இருக்கும்"

"ஆனா எனக்கு ஒரு டவுட் சார்?"

" இதால என்ன யூஸ்னுதானே யோசிக்கிற ? சொல்றேன்"

சிவா தலையாட்டியபடி பொறுமையுடன் காத்திருக்க, ஜான் ஒரு சிகரெட்டை பற்றவைத்துக் கொண்டு பெருமையுடன் விவரித்தார்.

"இப்ப இந்த பிராஜக்ட் எங்கிட்ட இருக்கிறது தெரிஞ்சா உலகநாடுகள் எல்லாம் போட்டிபோட்டுக்கிட்டு பணத்தை வாரியிறைச்சு வாங்க முன்வருவாங்க"

"அதான் சார் ஏன்னு எனக்குப்புரியல?"

ஜான் சிரித்தபடிக்கூறினார்.

"அதனாலதான் நீ இன்னும் அஸிஸ்டெண்ட். சொல்றேன் கேளு. இப்ப உலகத்தோட முக்கியமான பிரச்சனைகள்ல ஒண்ணு ஆயுதங்கள்.

எந்தெந்த நாடு என்னென்ன ஆயுதங்கள் வச்சிருக்கு, அதுல எதெல்லாம் பவர்ஃபுல் எல்லாமே ரொம்ப ரகசியமானது. இப்ப இந்த கண்டுபிடிப்பால அசால்ட்டா அடுத்த நாட்டோட ஆயுதங்கள் தொடங்கி இன்னும் என்னென்ன ரகசியங்கள் உண்டோ அத்தனையும் உருவிரலாம்" என்று கண்ணடித்தார்.

சிவா மிரண்டுபோய் கிடக்க அவர் தொடர்ந்தார்..

"பட், அந்த மெட்டீரியலோட வேலிடிட்டி ஒன் மந்த் வரை ஒர்க்காகுற மாதிரி டிஸைன் பண்ணிருந்தேன். ஆனா இந்தாளு பதினஞ்சுநாள்ல மறுபடி தன்னோட உருவத்துக்கு மாறிட்டான். அதான் எப்புடின்னு ஒரே கொழப்பமா இருக்கு. ஃபார்முலால ஏதாச்சும் சேஞ்ச் பண்ணனும்னு நெனைக்கிறேன். சரி நீ கெளம்புப்பா. நா அப்பறம் கால் பண்றேன்" என்றார் புரபசர்.

சரியென்றபடி கிளம்பிய சிவா சற்றே தயங்கிவிட்டு வெளியேறினான்.

* * *

புரபசர் கணிணியையே பார்த்துக்கொண்டிருந்தார். மூன்று நாட்களாக தலையைப் பிய்த்துக்கொண்டு யோசித்தும் பிடிபடவேயில்லை. கணிணியை அணைத்துவிட்டுப் படுக்கலாமென்று நகர்ந்தபோதுதாதான், "அசையாம அப்டியே இருங்க புரபசர்" என்ற சிவாவின் குரல் கேட்டது. புரபசர் திரும்பிப் பார்க்க மறுபடியும் அவன் குரல் மட்டும்தான் வந்தது உருவம் தெரியவில்லை.

சிவா நிதானமான குரலில்,

"ஒண்ணும் கன்பியூஸ் ஆகாதீங்க புரபசர். இது நீங்க கண்டுபிடிச்ச மருந்தோட உதவிதான். நீங்க சொன்னதும் சரிதான். எத்தனை வருஷந்தான் உங்க அசிஸ்டெண்டாவே இருந்து குப்பை கொட்றது ? அதனாலதான் அந்தாளுக்கு குடுக்கச்சொல்லி நீங்க குடுத்த ரெண்டு உருண்டைல ஒண்ண மட்டும் குடுத்திட்டு இன்னொரு உருண்டையை நானே வச்சிருந்தேன். ஏன்னா, எப்டியும் இந்த மெட்டீரியலோட ஃபார்முலா எல்லாத்தையும் நீங்க சீக்ரெட்டாதான் வச்சிருப்பீங்கன்னு தெரியும், அன்னிக்கி மிச்சமிருந்த அந்த உருண்டையை சாப்டு மறைஞ்சிட்டேன். ரெண்டுநாள் முந்தி பால் பாக்கெட் எடுக்க கதவைத் திறந்தப்ப உள்ள நொழைஞ்சு உங்களை கண்காணிச்சேன். இப்ப எனக்குத் தேவையான எல்லாமும் எனக்குக் கெடைச்சிருச்சி. நீங்க நிம்மதியா சாகலாம் புரபசர்"

சற்றைக்கெல்லாம் அங்கு ஒரு துப்பாக்கி வெடித்த ஓசை கேட்டது.

# 6.கர்னோட்டா

மின்சாரம் நின்ற முன்னிரவு ஒன்றில்தான் அவளைச் சந்தித்தேன். மெழுகுவர்த்தியின் குறையொளியில் நெளிந்தபடியிருந்தது நகராத அவள் நிழலுருவம். மெழுகுவர்த்திச் சுடரைச் சுற்றிவரும் சிறுபூச்சியொன்றை இமைக்காமல்  உற்று கவனித்துக்கொண்டிருந்தாள். சாண்டில்யனின் நாயகிபோல யவனமாக இருந்தாள். அவள் அணிந்திருந்த உடை சரித்திரநாவல்களின் ஓவிய இளவரசிகளை ஒத்திருந்தது. கதவு திறந்ததும் நேராக உள்ளே நுழைந்து சோபாவில் அமர்ந்துகொண்டாள்.

நான் குழப்பத்துடன் நின்றிருக்க, அருகில் அமரச்சொல்லிச் சைகை செய்தாள். நான் தயங்கினேன்.

"ஏன் அஞ்சுகின்றாய் ? நானொன்றும் உன்னைக் கடித்து விழுங்கிவிடமாட்டேன் வா" என்றாள் புன்னகைத்தபடியே.

"தப்பா நெனைச்சுக்காதீங்க... நீங்க யாருன்னு"... கேட்டது நான் தான்.

" ஓ !! உனக்கு என்னை நினைவில்லையா?”

இப்பொழுது என் குழப்பம் அதிகரித்தது. ஏற்கனவே என் மனைவிக்கு என்பேரில் அளவற்ற நம்பிக்கை. இதில் இரவு நேரத்தில் ஒரு பெண்ணை வேறு கூட்டிவந்து வீட்டில் வைத்துப் பேசிக்கொண்டிருப்பது தெரிந்தால் பிரமாதமாக இருக்கும் என்றெண்ணிக்கொண்டேன்.

அவள் வாய்விட்டுச் சிரித்தாள். பிறகு, "உன் எண்ணங்களை என்னால் வாசிக்க முடிகிறது. பதறாதே. நான் வந்த பணி முடிந்ததும் கிளம்பிவிடுவேன்"

என் பதற்றம் அதிகரித்தது. நான் நிர்வாணமாக இருப்பதுபோல் உணர்ந்தேன். என் எண்ணங்களையெல்லாம் வாசிக்கமுடிகிறது என்கிறாளே.

"இல்ல நெஜமாவே எனக்கு உங்களத் தெரியலங்க. யார் நீங்க?”

அவள் என்னை ஊடுறுவுவதுபோல் பார்த்தாள்.

" சரி என்னை நினைவில்லாவிட்டால் பரவாயில்லை. கஸானையாவது ஞாபகமிருக்கிறதா?”

சுத்தம். எனக்கு இவளையே தெரியவில்லை. இந்த லட்சணத்தில் கஸானாம் கஸான். அது யாராக இருக்குமென்று யோசித்தேன்.

"அது சரி. என்னைத் தெரியவில்லை. கஸானைத் தெரியவில்லை. என்றால், நிண்டூராவையும் மறந்திருப்பாய்"

நான் பதிலேதும் கூறாமல் தரையை வெறித்துக்கொண்டிருந்தேன். சட்டென்று மின்சாரம் வந்து மின்விசிறி சுழலத் துவங்கியது. அவள் கண்களை மூடிப் புழுக்கம் விரட்டிய காற்றை அனுபவித்தாள். வெளியே படிக்கட்டுகளில் என் பிள்ளையின் குரல்கேட்டது. அவனை அதட்டும் என் மனைவியின் குரலும். சட்டென்று ஒரு இறுக்கம் சூழ்ந்துகொள்ள, நான் வாசற்கதவை அகலத் திறந்து வைத்தேன். செருப்பைக் கழற்றியவாறே என் மனைவி என்னை முறைத்தாள். மகன் சோபாவில் அமர்ந்திருந்தவளை புருவம் சுருங்கப்பார்த்தபடி என் முழங்கால்களை கட்டிக்கொண்டான். மனைவி அவளைப் பார்த்துச் சம்பிரதாயமாக ஒருமுறை சிரித்துவைத்தாள். பிறகு உள்ளறைக்குச்சென்று எனக்கு ஜாடை செய்தாள்.

சோபாவிலிருந்தவள் என் மகனை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். உள்ளறைக்குச்சென்றதும் என் மனைவி கேட்டாள்.

"யாருங்க அது?"

கேள்வி அடிக்குரலில், இறுகிய அவள் பற்களின் வழியே வழிந்ததை கவனித்துக் கொண்டேன்.

"யாருன்னு தெரியலடி பாப்பு. கதவத்தொறந்ததும் தன்னால உள்ள வந்து ஒக்காந்துகிட்டு என்னென்னமோ கேக்கிறாங்க"

அவள் பார்வையில் அவநம்பிக்கை வழிந்தது.

"யாருன்னு தெரியாமத்தான் நடு ஊட்ல ஒக்காரவச்சு பேசிட்டிருக்கீங்களாக்கும்?"

"அய்யோ பாப்பு என்னிய நம்பு. சத்தியமா அந்தப் பொண்ணு யாருன்னு தெரில"

அவள் ஹாலுக்குச் சென்று அவளிடம் காப்பி வேண்டுமா என்று விசாரித்தாள். பின்னாலேயே ஆடுபோல நானும் சென்று ஒரு சேரைப் போட்டுக்கொண்டு சோபாவிற்கு எதிரில் அமர்ந்து கொண்டேன். என் மனைவி சமையலறையில் காப்பி கலந்து கொண்டிருந்தாள். அவள்

கண்களும் காதுகளும் ஹாலில்தான் இருந்தன. சோபாவிலிருந்தவள் ஒருமுறை சோம்பல் முறித்துக் கொண்டாள்.

"சரி வா சற்று வெளியில் சென்று வரலாம். எனக்கு உன்னிடம் தனிமையில் பேச வேண்டியிருக்கிறது"

சமையலறையில் பெரிய பாத்திரமொன்று டணாலென்று விழுந்ததன் காரணம் எனக்குத் தெரிந்ததுதான்.

"இல்லங்க. எதுனாலும் இங்கயே சொல்லுங்க" என்றேன் உஷாராக மனைவியைப் பார்த்துக்கொண்டு.

என் மகன் அர்ஜண்டாக ஆய் போகவேண்டுமென்று டிராயரை அவிழ்த்துவிட்டு வந்து நின்றான். அவனை அழைத்துச்சென்று டாய்லட்டில் உட்கார வைத்துவிட்டு மறுபடி சோபாவில் இருந்தவள் எதிரே வந்து உட்கார்ந்து கொண்டேன். அவள் ஒரு முடிவிற்கு வந்தவள்போல நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள்.

"உன்னை இந்த நிலையில் சந்திப்பேனென்று நினைக்கவில்லை கர்னோட்டா. சரி அது உன் விருப்பம். நீ அந்த வாளைக் கொடுத்துவிடு. இனி உனக்கு அது தேவைப்படாது"

சுவரோரம் நகரும் எறும்புகளின் நடைச் சத்தம் கேட்குமளவு மவனம் சூழ்ந்தது.

"நீங்க என்ன சொல்றீங்கன்னே புரியல. மொத நீங்க யாரு? என்ன வாளு? என்ன கேக்கறீங்கன்னே"....

நான் முடிக்குமுன்பே அவள் சரேலென்று சோபாவிலிருந்து எழுந்து இடையிலிருந்த குறுங்கத்தியை என்னைநோக்கி ஓங்கினாள். உள்ளே கிச்சனில் இப்போது நிறைய பாத்திரங்கள் உருண்டன. இத்தனையும் மைக்ரோ கணங்களில் நிகழ, அதிர்ச்சியில் ஆச்சரியத்தில் எனக்குச் சிரிப்புகூட வந்துவிட்டது. அவள் கண்கள் நெருப்பைப்போல பளபளத்தன. என் மனைவி பதற்றத்துடன் ஓடிவந்தாள். குறுங்கத்தியை சற்றும் தளர்த்தாமல் உதடு குவித்து விசுக்கென்று சப்தமிட்டாள் அவள். வாசல்வழியே இரண்டு குண்டர்கள் ஈட்டியுடன் நுழைந்தார்கள்.

அவர்கள் என் மனைவியை இருபுறமும் பிடித்துக்கொள்ள, திமிறிய என் மனைவியின் கன்னத்தில் ஒரு அறைவிழ மயங்கி விழுந்தாள். அடித்தது அவள்தான். இத்தனை களேபரத்தின் நடுவில் டாய்லட்டிலிருந்து 'ஜப்பி ச்சீக்ஸ்' ரெய்ம்ஸ் வழிந்து கொண்டிருந்தது என் மகனின் குரலில். நான்

சூழலை நிதானமாக உள்வாங்கினேன். பிரிட்ஜ் இருந்த மூலையில் நினைவின்றிக் கிடந்தாள் என் மனைவி. கைகளில் ஈட்டியை எறியத் தயாராய் நின்றிருந்தனர் இருவர். அசப்பில் பார்ப்பதற்கு நாடகக் கம்பெனியிலிருந்து ஓடிவந்தவர்கள் போலத்தான் இருந்தது. அவள் ஒருவேளை திரௌபதி வேடம் தாங்கியிருந்திருக்கலாம். அல்லது கீழ்ப்பாக்கத்திலிருந்தும் வந்திருக்கச் சாத்தியமுண்டு. முகவரி மாறியும் வந்திருக்கலாம். ஆனால் அவர்கள் கேட்கும் வாளுக்கு எங்கு செல்ல ? என் தீவிர யோசனைகளை வாசித்துவிட்டதுபோல புன்னகைத்தாள் அவள்.

கத்தியை மறுபடி இடையில் சொருகிக் கொண்டு முகத்தில் சாந்தம் பொங்க என்னை நெருங்கினாள். உரிமையுடன் என் கைகளைப்பிடித்து அழைத்து சோபாவில் அமரச்செய்தாள். டாய்லெட்டிலிருந்து மகன் அலம்பிவிடச்சொல்லிக் கத்தினான்.

நான் அவள் அனுமதிக்குக் காத்திராமல் சென்று மகனைச் சுத்தம்செய்து அழைத்துவந்து மடியில் உட்கார வைத்துக் கொண்டேன்.

"பார் கர்னோட்டா. மிகநீண்ட நெடும்பயணத்திற்குப்பின் உன்னைக் கண்டுபிடித்திருக்கிறேன். அத்தனை சுலபத்தில் விட்டுவிடுவேனென்று நினைக்காதே. வாளைக் கொடுத்துவிடு. என் வழியில் சென்று விடுகிறேன். அங்கே நிண்டூராவின் மக்கள் பெரும் அபாயத்தில் இருக்கிறார்கள். அந்த வாள் தவிர்த்து வேறெதனாலும் காப்பாற்ற இயலாது அவர்களை என்று உனக்குத் தெரியாதா? எனக்காக இல்லாவிட்டாலும் கஸானுக்காகவேனும் நீ இதைச் செய்துதான் ஆகவேண்டும்"

என் பிள்ளை சோபாவில் கிடந்த அவள் உடையின் நீட்சியிலிருந்த முத்துக்களை நிரடிக் கொண்டிருந்தான். அவளுக்கு என்ன பதில்கூறுவதென்று தெரியவில்லை. எந்த வாள், யாருக்கு அபாயம், நிண்டூரா எங்கிருக்கிறது எதுவும் தெரியவில்லை. ஒரு பக்கம் நான் ஏதோ கனவிற்குள் விழுந்துவிட்டேனோ என்றும் தோன்றியது. நெடுநேரப் போராட்டத்திற்குப்பின் மின்விசிறியின் காற்றில் அணைந்துவிட்ட மெழுகுவர்த்தியின் மணம் நாராசமாயிருந்தது. அவள் ஜாடை செய்ததும் அந்த ஈட்டி வைத்திருந்த குண்டர்கள் கதவைச் சாத்திக் கொண்டு வெளியேற, அவள் திடீரென்று அழ ஆரம்பித்தாள். விழிகளில் கண்ணீர்வழிய கோணலான அவள் உதடுகளின் வழி வார்த்தைகள் நடுக்கத்துடன் வெளிப்பட்டன.

"கஸானை அவர்கள் சிறை பிடித்து விட்டார்கள் கர்னோட்டா. அவனை மீட்க வேண்டும். நீ வரமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். அவன் செய்த துரோகம் அப்படி. இருந்தாலும் அவனைப் பழிவாங்கும் நேரம் நிச்சயம் இதுவல்ல. ஒரு சுத்த வீரனான உனக்கு தர்ம நியாயங்கள் நான் கூறித்தான் தெரிய வேண்டுமென்பதில்லை"

குனிந்து முதுகு குலுங்க அழும் அவளை விசித்திரமாகப் பார்த்தான் என் மகன். எனக்கும் அவளைப் பார்க்கப் பாவமாகத்தான் இருந்தது. என்ன செய்வதென்று தவித்தேன். என் மனைவியிடம் மெலிதான அசைவு தென்பட்டது. அருகில் சென்று பார்த்தேன். இன்னும் மயக்கத்தில்தான் இருந்தாள்.

"நிண்டூராவின் மக்கள் இன்னும் உன் பெயரைத்தான் உச்சரித்துக் கொண்டிருக்கிறார்கள் கர்னோட்டா. நீ திரும்பவும் வருவாயென்று திடமாக நம்பிக் கொண்டிருக்கிறார்கள்"

நான் என்ன பேசுவதென்று தெரியாமல் அவளையே பார்த்துக்கொண்டு அமர்ந்திருந்தேன். பக்கத்தில் எவர் வீட்டிலிருந்தோ பழைய பாடல்கள் ஒலித்துக் கொண்டிருந்தது. என் மகன் எழுந்து டீவியை ஆன்செய்தான். சீரியலில் யாரோ ஒரு குண்டுப் பெண்மணி அழுதுகொண்டிருந்தாள்.

"நீ சென்றபின் அனைத்தும் தலைகீழாக மாறிவிட்டது. அவர்கள் நீ இல்லை என்றறிந்ததுமே துணிச்சல் பெற்று உள்ளே வந்துவிட்டார்கள். நம் வனங்களை வளங்களை எல்லாம் அழித்து... என்னென்னவோ கொடுமைகள் நடந்தேறி விட்டன. ஜாண்டூஸ் நதி முழுதும் நம் மக்களின் குருதி கலந்தோடியது. குரோமிதர் இறக்கும் வரை உன் வருகைக்காக நம்பிக்கையுடன் காத்திருந்தார். பாவிகள் அவரை நெருப்புக்கு இரையாக்கினார்கள்"

அவள் நிமிர்ந்து என் கண்களை ஒருமுறை பார்த்துவிட்டு, மறுபடி குனிந்து கைவிரல்களை பார்க்கத் துவங்கினாள்.

"பிடிபடும் முன்பு கஸான் ஓலையனுப்பியிருந்தான். ஒருவேளை தான் திரும்பாவிடில் கர்னோட்டாவைச் சந்திக்கும்படி அதில் எழுதியிருந்தான். எஞ்சியிருக்கும் உயிர்களையேனும் காக்கத்தான் எத்தனையோ அபாயங்களைக் கடந்து உன்னிடம் வந்தேன். மாபூகபர்களால் பூஜிக்கப்பட்ட அந்த வாளிற்கு மட்டுமே அவர்கள் அஞ்சுவார்கள். அதைக் கொடுத்துவிடு கர்னோட்டா. தாமதிக்கும் ஒவ்வொரு கணத்திற்கும் அங்கே அனேக உயிர்கள் பறிக்கப்பட்டுவிடும்"

எனக்கு என் வீட்டின் பூஜையறையிலிருந்த பூர்வீக வாளின் நினைவு வந்தது. வழிவழியாக என் குடும்பத்தினர் பத்திரப்படுத்தி வைத்திருக்கும் வாள் அது. வாதாபியைப் போரில் வென்று தீக்கிரையாக்கிய பின்பு திரும்பிவந்த பல்லவ சக்கரவர்த்தி நரசிம்மர்,  தனது யானைப்படை தளபதியான என் முன்னோரில் ஒருவருக்கு பரிசாகக் கொடுத்த வாள் என்று சொல்லிக்கொண்டிருந்தார் என் தாத்தா. யாருமே கழற்றிப் பார்த்திடாத  துருப்பிடித்துக்கிடக்கும் அந்தவாளின் உறையின்மேல் வட்டெழுத்தில் வாதாபி வெற்றியைப் பற்றிய குறிப்புக்கள்கூட இருக்கும். நான் ஒரு முடிவுக்கு வந்தேன்.

பூஜையறையைத் திறந்து அந்தவாளை எடுத்துவந்து அழுதுகொண்டிருந்தவள் தோளில் தொட்டேன். தலைதூக்கி என்னைப்பார்த்த அவள் கண்களில் அத்தனை பிரகாசம்.

"இப்பவும் சொல்றேன். எனக்கு உங்களையோ, இல்ல நீங்க சொன்ன .... கஸானா? அவனையோ தெரியல. எங்கிட்ட இருக்கிற ஒரே வாள் இதுமட்டுந்தான். இது பயன்படுமா பாருங்க. இல்லாட்டி நீங்க தப்பான எடத்துக்குத்தான் வந்திருக்கீங்க" என்றபடி வாளை அவளிடம் நீட்டினேன்.

அவள் சற்றே சந்தேகத்துடன் வாளை வாங்கி திருப்பித்திருப்பிப் பார்த்தாள். வாளின் உறையிலிருந்த எழுத்துக்களை விரல்களால் ஆசையுடன் தடவினாள். பிறகு எதிர்பாராதவிதமாக எழுந்து என்னை அணைத்துக் கொண்டாள். என் உடல் சிலிர்த்துக்கொண்டது. கண்களைத் துடைத்தபடி எனக்கு நன்றிகூறினாள். பிறகு வாளுடன் கதவைத் திறந்துகொண்டு வெளியேறினாள்.

நான் மூடிய கதவையே சிலவிநாடிகள்  வெறித்துப் பார்த்துவிட்டு மகனுடன்  என் மனைவியை நெருங்கினேன்.

***

"சொல்லு ஜெமி. காயா பழமா?”

"முற்றிய பழம். மெட்டீரியலை எங்க வந்து கலெக்ட் பண்ணிக்கிறீங்க?”

"ஒண்டர்புல் ஜெமி. தட் இஸ் ஒய் ஐ ச்சூஸ் யு. ஒன் அவர்ல ஸ்டேடியத்துல மீட் பண்ணுவோம்"

# 7. நான்

"ப்ளீஸ் டாக்டர். இதோட எத்தனை முறை நடந்திடுச்சி. தயவுசெஞ்சு உண்மையச் சொல்லிடுங்க ப்ளீஸ்".

டாக்டர் நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டார்.

***

1. நீங்கள் இதை படித்துக்கொண்டிருக்கும் விநாடியில் நான் கொல்லப் பட்டிருக்கலாம்.

அதிக சமயமில்லை. அவர்கள் என்னை நெருங்கிக் கொண்டிருக்கிறார்கள். எந்த நேரமும் அவர்கள் என்னைக் கோழி பிடிப்பதுபோல் அமுக்கிப் பிடித்து என் கழுத்தைத் திருகிப் போடக் கூடும். எனவே சுருக்கமாக என்னைப்பற்றி சொல்கிறேன்.

எனக்கு சொந்தஊர்... இல்லை. அதெல்லாம் பிழைத்துக் கிடந்தால் பிறகு சொல்கிறேன்.

ஆமாம் பிறந்து வளர்ந்து கொஞ்சம்போல படித்து கல்யாணம் செய்து பிள்ளைபெற்று எல்லாமே பிறகுதான்.

பிழைக்கவென்று ஆரம்பித்ததிலிருந்து நான் டிரைவராக இருக்கிறேன். பதினைந்து வருடங்களாக டிரைவர்தான். இன்னும் இருபது வருடங்கள் கடந்தும் நான் டிரைவராகவே இருப்பேன் என்பதை எந்தக் கோவிலிலும் சத்தியம் செய்யத் தயாராக இருக்கின்றேன்.

ஏனெனில் நானிருப்பது இந்தியாவில். குறிப்பாக தமிழ்நாட்டில். இங்கு வெறும் உழைப்பில் ஒருவன் பெரிய மனிதனாக உயர்வது என்பதெல்லாம் சினிமாக்களில் மட்டுமே சாத்தியம்.

இங்கு உயரத்திற்கு வந்துவிடக் கூடிய தகுதிகள் என்றால், முதல் தகுதியாக இங்கு பிறந்திருக்கக் கூடாது. இரண்டாவது தமிழ் சுத்தமாக தெரிந்திருக்கக் கூடாது. குறைந்தபட்சம் தமிழை தப்புந் தவறுமாக கொச்சையாகவேனும் பேசத் தெரிந்திருத்தல் நலம்.

வேற்று மாநிலத்திலிருந்து கணிசமான தொகையோடு வந்திருந்தால் சாலச் சிறந்தது. மந்திரிகளின் தூரத்து உறவாயிருந்தால் ஓரளவிற்கு ஓகே, பொய் சூது தந்திரங்கள் கிடையாதென்றால் வேஸ்ட்.

என்னிடமுள்ள கெட்டபழக்கங்களில் இதுவும் ஒன்று. சொல்லவந்ததை விட்டுவிட்டு ஏதேதோ உளறிக்கொண்டிருப்பேன்.

அய்யய்யோ அவர்கள் வந்துவிட்டார்கள். நான் காலி. பார்ப்போம் வாய்ப்பிருந்தால் அடுத்தஜென்ம.... ஆ.. அய்யோ.. ஹக்....
***

2

ஒரு சினிமா நடிகையாக இருப்பதன் மிகமோசமான வலிகளில் ஒன்று. நாம் விரும்பியதைகூட சாப்பிட்டுவிட முடியாது. கழுகு மூக்கை கொண்ட மேனேஜர் உடனடியாக ஓடிவந்து விடுவான்.

"மேம் மேம் மேம். ப்ளீஸ் மேம். நோ ஐஸ்க்ரீம்ஸ். வீ ஹவ் டப்பிங் டுடே".

நான் அவனை மிகக் கேவலமான ஒரு ஆங்கில வார்த்தையால் திட்டினேன். அத்தனை பெரிய புகழ்ச்சியை தன் வாழ்நாளில் கேட்டதில்லை என்பதுபோல என்னைப் பார்த்துச் சிரித்தான்.

சிறிதுகூட கோபப்படவில்லை. உணர்ச்சிவசப்படவில்லை. சுருக்கென்று பார்க்கவில்லை. வீட்டிற்குச் சென்றபின் மனதிற்குள் என்னை வெறித்தனமாக கற்பழிப்பானோ என்னவோ.

இவனிடமும் உதவியை எதிர்பார்க்க முடியாது. என்னை அரைநிர்வாணமாக ஆட்டம்போடவிட்டு அதில்வரும் கட்டுக்கட்டான பணத்தை ருசித்துப் பழகிய உறவென்னும் பெயரில் என்னைச் சுற்றியிருக்கும் அட்டைப் பூச்சிகளின் சொல்லுக்குத்தான் இவன் ஆடுவான்.

ஒரு போன் கால். ஒரேயொரு போன் காலுக்காகத்தான் காத்திருக்கிறேன். இதுவரையிலான என் வாழ்வை ஒட்டுமொத்தமாக மாற்றியமைக்கப்போகும் அவனுக்காக.

எல்லாம் திட்டப்படி நடந்தால் நாளை காலை திருச்செந்தூர் கோவிலில் அவனோடு திருமணம். நடந்தால் என்ன நடந்தால்.... நடக்கும். நிச்சயம் நல்லபடியாக நடக்கும்.

என்றெல்லாம் எத்தனை ஆசையாக கிளம்பினேன். புல்ஷிட். அவன் வரவில்லை. அவன் சொன்னானென்று ஏர்போர்ட்டில் சென்று எத்தனை நேரம் காத்திருக்கிறேன்.

இந்த நொடிவரை வரவேயில்லை. ஏன் வரவில்லை ? கடத்தப்பட்டானா ? தாக்கப்பட்டானா ? பயந்து ஓடிவிட்டானா ?

நான் ஏன் அழவேண்டும் ? என்ன தவறு செய்தேன் அழுவதற்கு ? ஒரு நடிகை கடைசிவரை நடித்துக் கொண்டே இருக்க வேண்டுமா ?

முகத்தோல் வழண்டு தொப்பை விழுந்து கிழவியாகி நாயகனாய் நடித்தவனுக்கே தாயாக, தவமிருந்த தயாரிப்பாளர்கள் அலைபேசியை எடுக்காதவரை நடித்துக் கொண்டேதான் இருக்க வேண்டுமா ?

என் முடிவை நான் தேடிக் கொள்கிறேன். இந்த மாத்திரைகள் போதை தரக்கூடியவை. எண்ணிக்கை அதிகமானால் இந்த உடலிலிருந்து விடுதலையும் தரக்கூடியவை.

நான் மாத்திரைகளை விழுங்கும்போது அந்த சண்டாளர்கள் வந்து தடுத்துவிட்டார்கள்.

***

3

என்னை உங்களுக்குத் தெரிந்திருக்கும். இல்லாவிட்டால் சரித்திர நூல்களைப் புரட்டிப் பாருங்கள். ஏதேனும் சில பக்கங்களில் நான் நிறைந்திருப்பேன்.

என் தந்தை பிலிப்பின் ஆசை மனைவிக்குப் பிறந்தவன். சிறுவயதிலிருந்தே உசுப்பேற்றிவிடப்பட்டவன். அடர்ந்த காட்டிற்குள் எவருக்கும் அடங்காத அந்த புஸிபாலஸ் குதிரையை அடக்கியவன் நான் தான். அதன் சூட்சுமத்தை எனக்கு யாரேனும் சொல்லித் தந்திருக்கலாம். அல்லது நானாகவேகூட யோசித்திருக்கலாம். எனக்கு நியாபகமில்லை. இப்போதைய என் ஞாபகமெல்லாம் என் படைகளைப் பற்றித்தான். என் வீரர்களைப் பற்றித்தான். மிகக்கடுமையான விஷஜுரத்தில் நடுங்கும் என் விரல்களைப்பற்றித்தான்.

உலகம் முழுவதையும் ஒரே அரசன் ஆண்டால் தேசங்களுக்குள், மக்களுக்குள் வேற்றுமைகளின்றி பிரச்சனைகளின்றி வாழமுடியுமென்ற என் ஆசான் அரிஸ்டாட்டில் கூற்றில் நம்பிக்கைவைத்து புறப்பட்டவன் நான். கடும் புயல் வீசும் இந்தப் பாலைவனத்தில் நோயுற்றுக் கிடையாய் கிடப்பேன் என்று கனவிலும் நினைக்கவேயில்லை. இதைப்பற்றி என் ஆசான் எதையும் சொல்லவேயில்லை என்பதில் எனக்கு வருத்தம்தான்.

ஞானி டயோனிஜிஸ் மெல்லச் சிரிப்பது அருகில் எங்கிருந்தோ

எதிரொலிக்கின்றது. மரணம் என்னை நெருங்கிக்கொண்டிருப்பதாகத் தோன்றுவதை வெற்று பிரமையென்று கொள்ளமுடியவில்லை.

உலகை வெல்லப் புறப்பட்டவன் வெறுங்கையோடு திரும்புகின்றேன் என்பதைத் தெரிவிக்க எனது உள்ளங்கைகளை சவப்பெட்டிக்கு வெளியிலிருக்கும்படி எடுத்துச் செல்ல உத்தரவிட்டிருக்கிறேன்.

எனது சவ ஊர்வலத்தில் எவரேனும் சொல்லக்கூடும் இதோ மாவீரன் அலெக்ஸாண்டராக இருந்த உடல் செல்கிறதென்று.

***

4

நான் ஆறாம்வகுப்பு படிக்கும்போதுதான் முதன்முதலாக அந்த மாற்றம் கவனம் பெற்றது. சிறுவனான என் உடலெங்கும் பெண்மையின் நளினங்கள் எங்கிருந்தோ வந்து ஒட்டிக் கொண்டன.

நடக்கும்போது கால்கள் மெல்ல பின்னிப் பின்னி நடந்தன. என் இடுப்பு ஒயிலாக ஆடின. மகிழ்ச்சியின் போதும் ஆச்சர்யங்களின்போதும் என் கைகள் தானாகத் தட்டிக்கொண்டு முகவாயில் வைத்துக்கொண்டன.

உடன்படிக்கும் மாணவர்களெல்லாம் 'டேய் பெண்டுகச் சட்டிடா' என்று என் காதுபடவே கேலிசெய்தார்கள்.  மாணவிகளெல்லாம் முகம் சுளித்து விலகிச் சென்றார்கள். ஆத்திரப்பட்டு நான் ஒரு பெண்ணைப்போல கோணிக்கோணி அழுதபோது வாய்விட்டுச் சிரித்தார்கள்.

தெருவில், அக்கம்பக்கம் வீடுகளில் என எல்லா இடங்களிலும் நான் கேலிப்பொருளானேன். என் உடலெங்கும் ஊறிய பார்வைகள் ஊசியென துளைத்தன.

நான்கு வருடங்களாக நான் வாங்காத அடியுதைகளில்லை. வசவுகளில்லை. வாரக்கணக்கில் ஒரு அறையில் என்னை அடைத்துவைத்தார்கள். நான் என்ன செய்ய ?

நிஜமாகவே என்னால் மாற்றிக் கொள்ளக் கூடியதென்றால், எல்லா சித்திரவதைகளையும் பொறுத்துக்கொள்ள தலையெழுத்தா என்ன ?

எனக்கு அவ்விதமாக இருப்பதுதான் இயல்பாகச் சுலபமாக இருக்கின்றது. பெண்ணைப்போல உடுத்துக் கொள்ளவும் அலங்கரித்துக் கொள்ளவும்தான் ஆர்வமாக இருக்கின்றது.

அவமானமாக இருக்கிறதென்று அழுது அரற்றுகிறார்கள் என் குடும்பத்தினர். போகட்டும். எல்லாமே இன்னும் சிலநேரம்தான். அவர்கள் என்னைக் கொல்வதென்று தீர்மானித்து விட்டார்கள்.

எனக்கும்கூட இந்த வாழ்வு வெறுத்துத்தான் போய்விட்டது. எவராலும் புரிந்து ஏற்றுக் கொள்ளப்படாத என் வாழ்வு இருந்தென்ன போயென்ன ?

இதோ அவர்கள் வரும் ஓசை கேட்கின்றது. பேய்கள்கூட உறங்கும் இந்த நள்ளிரவில் என் அறைக் கதவை மெல்லத் திறந்துகொண்டு உள்ளே வருகின்றார்கள்.

நான் மூச்சை இழுத்துப்பிடித்துக்கொண்டு அமைதியாக காத்திருந்தேன்.

***

டாக்டர் நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டதும் அவள் மறுபடி கேட்டாள்.

"ப்ளீஸ் டாக்டர். அவருக்கு என்னாச்சின்னு மறைக்காம சொல்லுங்க".

டாக்டர் தன் வழுக்கை விழாத தலையைச் சற்று சொறிந்துவிட்டுச் சொன்னார்.

"அவரு பிராப்ளத்துக்கு 'ஸ்கீட்ஷோபிரனியா'னு பேர். ஸ்பிளிட் பெர்ஸனாலிட்டினு சொல்ற ஒருவித மனச்சிதைவு கோளாறு. உதாரணமா சொல்லனும்னா, பியூட்டிபுல் மைன்ட், ஷட்டர் ஐலன்ட் படங்கள்லாம் இந்த டிஸார்டர் பேஸ்ல எடுக்கப்பட்டதுதான். தமிழ்லகூட சந்திரமுகி அந்நியன்லலாம் கொஞ்சம் ஈசியா புரியற மாதிரி விலக்கிருப்பாங்க".

அவள் கொஞ்சம் குழப்பமாக வருத்தமாக, "அய்யோ போனமாசம் வரை நல்லாதானே டாக்டர் இருந்தாரு. திடீர்னு இப்டி ? அதும் தற்கொலைலாம் செஞ்சிக்கிற அளவுக்கு?"

டாக்டர் சத்தமின்றிச் சிரித்தார்.

"யாருக்கு வேணா எப்ப வேணா இது வரலாம். ஹெரிடிட்டியாவும் இருக்கலாம். பெரும்பாலும் சிறுவயது பாதிப்புகள் தனிமை இதெல்லாம்தான் அதிகபட்ச காரணங்கள். அதுவும் உங்க ஹஸ்பன்ட் ஒரு ரைட்டர் வேற. எத்தனை கதைகள் எழுதிருக்காரு. அந்த கேரக்டர்ஸோட பாதிப்புகளாலகூட இதுமாதிரி ஆகிருக்கலாம்".

அவள் இப்போது அழத்தொடங்கினாள்.

"இது எப்ப சார் குணமாகும் ? எங்க சொத்து மொத்தமும் வித்தாவது..."

அவள் முடிக்குமுன் டாக்டர் சொன்னார். அவசரப்படாதிங்க. திஸ் இஸ் கன்ட்ரோலபிள் பட் நாட் கியூரபிள் நவ்".

அவள் இப்போது சத்தமாக அழுதாள்.

***

5

I may not be alive, when you read this.

Oh… I forgot to introduce myself. I'm one of the top ten multimillionaires in India. My family is very familiar known by the name 'The *********' .
And I am '*********'. All these things happened because of my brother ****. Yup.We have some problem.
This whole thing has been planned by my brother. His only motive is to rid me of all my  resources. That's why he is trying to prove that I'm mentally ill calling it by some ‘hard-to-pronounce’ medical name.
The doctor too is a fraud.
The woman acting like my wife is also a part of this conspiracy.
Everybody is against me for money.
Wait. Actually I'm feeling crazy. I'm a Tamil writer. Confused?  Ha ha ha !
I'm writing this is in English because I don't know Tamil. Then how can i think like that ?
Whatever,  I don't know Who you are, reading this but, please please please.....
go to police and tell them immediately that '*****’ is the reason...if anything happens to me.

# 8. பூக்குட்டி

செல்வி கதவைத் திறந்ததும் அவள் முகத்தைத் தவிர்த்துவிட்டு படுக்கையறை சென்று சட்டையைக் கழற்றி கொடியில் போட்டான் பரமு. நாலுவயது மகன் ஓடிவந்து காலைக் கட்டிக்கொண்டு என்னவோ பேசினான். அது எதையும் வாங்கும் மனநிலையில் இல்லை அவன். பின்னாலேயே வந்த செல்வியின் முகம் அழுது வீங்கியிருந்தது. அவள் அழுகையைக் காணச் சகியாமல்தான் மதியமே போன் செய்து விஷயத்தைக் கூறிவைத்திருந்தான்.

"அப்ப கன்பார்மா நாளைக்கி வந்து எடுத்திட்டுப் போயிருவாங்களா?” என்று கேட்ட செல்வியின் குரலில் மற்றுமொரு அழுகைக்கான ஆயத்தம் தெரிந்தது. இதை எதிர்கொண்டுதான் ஆகவேண்டும் அவன்.

"ம்.. நாளைக்கு காலைல வர்றதாச் சொல்லிருக்காங்க"

அவள் விட்டத்தை வெறித்துவிட்டு, கிச்சனை நோக்கி நகர்ந்து சென்றாள். அவளுக்கு இதில் துளியும் விருப்பமேயில்லை. இத்தனைக்கும் ஆரம்பத்திலேயே அவள் கார் வாங்க வேண்டாம் ஆட்டோ வாங்கி ஓட்டு என்றுதான் ஆலோசனை கூறினாள். போகப் போக அவளுக்குமே காரின்மீது ஒரு பிடிப்பு வந்துவிட்டது.

பரமு கார் வாங்கியதே பெரிய கதை. பரமுவின் அப்பா மத்திய அரசில் பணிபுரிந்தும் பெரிய கடனாளியாகவே இருந்தார். பரமுவுக்குப் படிப்பு சரியாக வரவில்லை. கூரியர் பாய் ஆபீஸ் பாய் என்று ஏதேதோ வேலைகள் பார்த்தான். இறுதியாக ஒரு வழியாக டிரைவரானான். பரமுவுக்கு வாழ்வில் லட்சியங்களே இருந்ததில்லை. வாழ்வு அடித்துத் துவைத்து அழுக்குத் துணியை குப்பைக் கூடையில் எறிந்ததுபோல் எறிந்துவிட்ட இந்தத் தருணத்தில்கூட அவனுக்கு லட்சியங்கள் ஏதும் பெரிதாகக் கிடையாது, வாழ்வதைத் தவிர.

ஹாலில் சாப்பாடு தயாரானதன் அறிகுறிகளாக பாத்திரங்களின் ஓசை கேட்டது. சாப்பிடும் செயல் மிக அனிச்சையாக நடந்தது. செல்வி விரும்பிப் பார்க்கும் சீரியலில் யாரோ அழுது கொண்டிருந்தார்கள். செல்வி அதைக் கவனிக்காமல் பரமுவையே பார்த்துக் கொண்டிருந்தாள். மகனின் மழலைகள் எதுவும் பரமுவின் மனதிலேயே நுழையவில்லை.

பரமுவின் நண்பனொருவன் கார் வாங்கித் தருகிறேன் என்றதும், டாக்ஸி ஓட்டி பிழைத்துக் கொள்ளலாமென்று உடனடியாகச் சம்மதித்தான். அப்போது செல்வி நிறை மாதம். கார் டெலிவரி எடுக்கையில் அவன் அப்பாவும் அம்மாவும் கூட வந்தார்கள். அப்பாவின் முகத்தில் அப்படியொரு பெருமிதம். அவர் தலைமுறையில் கார் வாங்கிய முதல் ஆள் பரமுதான். தெருவில் போகிற வருகிற தெரியாத நபர்களிடமெல்லாம் கூப்பிட்டுக் கூப்பிட்டு "எம்மவன் காரு வாங்கிருக்கான். டாட்டா காரு" என்று அழிச்சாட்டியம் செய்தார்.

கார் வாங்கிய மூன்றாம் நாள், செல்விக்கு வழக்கமாக மாலையில் செல்லும் செக்கப்பிற்கு நல்லகாலமாக அன்று காலையே மருத்துவமனை செல்ல, பனிக்குடம் உடைந்துவிட்டதென்று உடனடியாக அட்மிட் செய்யச் சொன்னார்கள். பரமுவுக்கு மகன் பிறந்தான்.

"ஸ்லீப்பிங் லைன், ஸ்லாண்டிங் லைன், பிக் சர்க்கிள்" என்றபடியே மகன் வீட்டுப்பாடம் எழுதிக்கொண்டிருந்தான்.

"கைல எதாச்சும் காசு தருவாங்களா?"

" கேட்ருக்கேன் செல்வி. பத்தோ இருவதோ தருவாங்க"

"அவ்ளோதானா ? கொஞ்சம் கூட கேட்டுப்பாக்கலாம்ல?"

"எப்சி இன்சூரன்ஸ் எல்லாம் தீந்துருச்சிம்மா. டயரும் மாத்தனும். அல்ரெடி லோன் அமவுண்டு வேற இருக்கு. இது கெடச்சா பெருசு"

செல்வி சில விநாடி அமைதியாக இருந்துவிட்டுக் கூறினாள்.

"இந்தக் காரு நமக்கு நெறைய செஞ்சிருக்குல்ல?"

நிறையச் செய்திருக்கிறது. மகன் பிறந்தபோது பலமணிநேர மின்சாரத்தடை. வியர்வையும் கொசுக்கடியுமாக அழுதபடியே இருப்பான். அப்போதெல்லாம் அந்தக் காரில்தான் ஏஸிபோட்டு தூங்க வைப்பதும், சாப்பிட வைப்பதுமாக இருக்கும். பரமுவுக்குக் காரென்பது கார் மட்டும்தான். செல்விக்கு அதுவும் ஒரு மகள்போலத்தான். அவள் காருக்கு பெயர்கூட வைத்திருக்கிறாள். 'பூக்குட்டி'.

பரமு தனக்குத்தான் சாமர்த்தியம் போதவில்லை என்றுதான் நொந்து கொண்டான். இதே தொழிலில் நல்லபடி பிழைப்பவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால், பரமுவுக்கு வந்ததுபோல்

அவர்களுக்கும் பிரச்சனைகள் வந்திருக்குமா என்று தெரியவில்லை.

செல்வி அடிக்கடி வயிற்று வலியென்பாள். டாக்டர் வெறும் அல்சர்தான் எனக் கூறிப் பலமாதம் சிகிச்சை தந்தார். பின்பொருநாள் நள்ளிரவில் தாங்கமாட்டாத வலியில் அட்மிட் ஆனபோதுதான் ஸ்கேனிங்கெல்லாம் செய்து பித்தப்பையில் கற்கள் என்றார்கள். அந்தக் கற்களை வைத்து வீடே கட்டலாம் அத்தனை கற்கள் எனும் டாக்டரின் நகைச்சுவைக்குச் சிரிக்க முடியவில்லை பரமுவால்.

மறுநாளே மறுபடி ஸ்கேன் செய்து, ஓவர்நைட்டில் கற்கள் பித்தப் பையினின்று வெளிவந்து பித்தநீர் பாதையில் சில கிடக்கிறதென்று அதிர்ச்சியூட்டினார். ஒருமாத இடைவெளியில் இரண்டு ஆப்பரேஷன்கள். மீண்டு வந்ததுமே அப்பாவுக்கு ஹைட்ரோஸில் ஆப்பரேஷன். கடன். கடன். கடனை அடைக்க மேலும் கடன் என்று பெரும் மாயச் சுழலில் பரமு மாட்டிக்கொண்டது அப்போதுதான். இடையில் பரமுவின் காருக்கான தவணைகளையும் செலுத்த முடியாமல், நாளை வந்து காரை எடுத்துச் செல்லப்போகிறார்கள்.

ஒருவகையில் ஜப்திபோலத்தான். காரை அதன் சகலத்துடன் ஏற்றுக்கொள்ள ஒருவர் கிடைத்ததும் காருக்கு கடன் கொடுத்த நிறுவன அதிகாரியே கைமாற்றிவிட ஏற்பாடும் செய்துவிட்டார். என்ன, போட்ட முதலும், மூன்று ஆண்டுகளாக உழைத்த உழைப்புகளும் வீண். இத்தனைக்கும் உறவிலும் நட்பிலுமாகப் பலரும் உதவியிருக்கிறார்கள். எவர் விரலும் நீளமுடியாத பாதாளத்தில் கிடப்பதால் பரமுவால் வெளிவரவே முடியவில்லை.

மகன் ஹோம் ஒர்க் முடித்து ஜீன்ஸ் அணிந்து தயாரானான். அவனுக்கு வெளியில் செல்வதென்றாலே ஜீன்ஸ்தான். பரமு செல்வியை உடை மாற்றிக் கொள்ளச் சொன்னான். அவள் எதற்கு என்பதுபோல் குழப்பமாகப் பார்த்தாள்.

"இன்னிக்கித்தான் லாஸ்டு. கார்ல ஒரு ரவுண்டு போயிட்டு வந்திரலாம் புள்ள" என்று பரமு கூறியதும் செல்வி வெடித்துக் கதறினாள்.

வெளியில் தெருவிளக்கின் மஞ்சள் வெளிச்சம் சாலையெங்கும் பூசியிருந்தது.
கார் கிளம்பியதும் மகன் டாஷ்போர்டில் தாளமிட்டபடியே சினிமாப் பாடல் ஒன்றைப் பாடினான். செல்வி தேம்பியபடியே இருந்தாள். பரமு ஆடியோ சீடியை ஓடவிட்டு செல்வியிடம் கூறினான்.

" உடு செல்வி காருதான போவப்போவுது. நாம உசுரோடதான இருக்கோம்"
ஏஸியுடன் சேர்ந்து காரில் ஜேசுதாசின் குரலும் வழிந்தது.

'நம்பிக்கையே நல்லது..... எறும்புக்கும் வாழ்க்கை உள்ளது'....

# 9. ஒரு பயணமும் சில கதைகளும்

ஒரு தேநீர் அருந்தினால் நன்றாக இருக்கும்போல் தோன்றியது. மகாபலிபுரம் நுழைந்ததும் சாலையோர விடுதி ஒன்றில் காரை நிறுத்திவிட்டு உள்ளே சென்றேன். சாலையை பார்க்கும்படியான மேஜையொன்றில் அமர்ந்து கொண்டேன். சாலைக்கு எதிரிலிருந்து ஒருவன், ஒரு பார்வையற்ற பெரியவரைக் கைப்பிடித்து அழைத்துவந்து விடுதியில் விட்டுவிட்டுச் சென்றான்.

பெரியவர் பார்ப்பதற்கு, நல்ல உயரமாகப் பழைய கருப்பு வெள்ளைத் திரைப்படங்களில் வரும் கௌபாய்க் கிழவர் போலிருந்தார். தொப்பி மட்டும்தான் இல்லை. அடர் கருப்பு நிறத்தில் அவர் அணிந்திருந்த கண்ணாடியில் சாலையில் சென்ற வாகனங்கள் பிரதிபலித்தன. என் தேநீரை அருந்தியபடியே அவரைக் கவனித்தேன். அவர் தனது தேநீரை ஒரு குழந்தையைப்போல ரசித்துக் குடித்துக் கொண்டிருந்தார்.

டீ மாஸ்டர் பெரியவரிடம் பேச்சுக்கொடுத்தார்.

"எங்க சார் மெட்ராசா போவனும்?”

அவர் குரல் வந்த திக்கில் குத்துமதிப்பாகத் திரும்பி பதிலளித்தார்.

"ஆமாப்பா. என்னைக் கொஞ்சம் பஸ்டாப்பில கொண்டுபோய் விட்ரமுடியுமா?” என்றார் தனது காலித் தம்ளரை அருகில் வைத்துவிட்டுச் சில்லறையை எடுத்தபடி.

நான் எழுந்து தேநீருக்கான காசைக் கொடுத்துவிட்டு வெளியில் வந்தேன். பெரியவரிடம் கேட்டேன்.

"நானும் சென்னைதான் போறேன் சார். வரீங்களா இறக்கிவிட்டிடறேன்"

இதில் சம்மதமென்பதை அவர் முகத்தின் மகிழ்ச்சியின்வழி உணர்ந்து கொண்டேன். என் முழங்கையைப் பிடித்துக்கொண்ட அவர் உள்ளங்கை உஷ்ணமாக இருந்தது. உள்ளே அமர்ந்தபின் நான் காரைக் கிளப்பியபடியே அவரிடம் கேட்டேன்.

"யாரையாவது கூட கூட்டிட்டு வந்திருக்கலாமே சார். தனியா போக்குவரத்தெல்லாம் கஷ்டமில்லங்களா"

அவர் நேராக முன்புறத்துச் சாலையின் திசையில் முகத்தை வைத்தபடி மெலிதாகச் சிரித்தார்.

"சுத்தியும் மனுஷங்க இருக்கும்போது எனக்கென்ன தம்பி கவலை. உதவற மனுஷங்க இன்னும் இருக்காங்க உலகத்தில"

நான் சற்று அமைதியாக இருந்தேன். கார் சவுக்குத் தோப்புகள் அடர்ந்த சாலையில் சென்றுகொண்டிருந்தது.

"தம்பியும் சென்னைதானா?"

" ஆமா சார். அஷோக் நகர். நீங்க?"

"திருவான்மியூர் தம்பி.

"இங்க சும்மா சுத்திப் பார்க்க வந்தீங்களோ?"

"இல்ல சார். ஒரு கம்பெனில ஆர்.எம்-மா இருக்கேன். சைட் விஸிட்டிங்காக கடலூர் போயிட்டு வந்திட்டிருக்கேன்"

"அப்ப பொறந்து வளந்ததெல்லாமே சென்னைதான்னு சொல்லுங்க"

"ஆமா சார். நீங்க??"

"இப்பத்தான் தம்பி கொஞ்சநாளா சென்னைல இருக்கேன்"

"ஓ! அப்ப அதுக்கும் முன்ன?"

"அதெல்லாம் பெரிய கதை தம்பி. எதுக்கு உங்களை போரடிக்கணும்"

நான் சிரித்துக்கொண்டேன்.

"அப்டியெல்லாம் இல்ல சார். நீங்க வயசுல பெரியவங்க. எத்தனையோ அனுபவங்க இருக்கும். எப்டியும் முக்கால் மணிநேரம் ஆவுமே"

அவர் தனக்குள்ளாகப் புன்னகைத்துக் கொண்டார்.

"சரி அப்ப ஒண்ணு செய்வோம். நா உங்களுக்கு சில கதைங்களைச் சொல்லுறேன். அதுல எந்தக் கேரக்டர் நான்னு நீங்க சொல்லுங்க"

எனக்கும் பெரியவரின் இந்தப் பீடிகை பிடித்திருந்தது. நான் சம்மதம் என்றதும் அவர் துவங்கினார்.

கதைக்குள் கதை
***

கண்விழித்தபோது அவன் உடலெங்கும் வலித்தது. குறிப்பாக இடதுகால் ஆடுதசைப் பகுதியில் அதிகம் வலித்தது. அவன் கூரையின் துளைகள் வழி சூரிய வெளிச்சம் வழிந்தது. பக்கத்தில் தகர டிரம் ஒன்றின்மீது அவன் சீருடை கசங்கலாகக் கிடந்தது. அவன் சுற்றிலும் நோட்டமிட்டான். நிறைய தட்டுமுட்டுச் சாமான்களுடன் ஒரு பழைய அம்பாஸிடர் காரும் நின்றிருந்தது. கார் ஷெட்டாக இருக்கலாமென்று யூகித்தான்.

ஒரு மூலையில் மர அடுக்குகளில் விதவிதமான பறவைகள் கத்திக் கொண்டிருந்தன. ஷெட்டின் தகர கேட்டின் மெலிதான கிரீச்சிடலுடன் உள்ளே நுழைந்த அந்தப்பெண் முக்காடு அணிந்திருந்தாள். தொலைவில் எங்கோ ராணுவ விமானம் பறந்த ஒலியைத் தொடர்ந்து பெரும் வெடியோசை கேட்டதில் அவன் படுத்திருந்த கட்டில் அதிர்ந்தது. அவள் நெருங்கிவந்து அவன் கால் காயத்தைப் பரிசோதித்தாள். அவன் வலியில் முணகினான்.

"இது என்ன எடம்? நா எப்டி இங்கவந்தேன்?"

அவள் பதில் கூறாமல் கட்டை அவிழ்த்துவிட்டுப் புதிதாகக் கட்டிட்டாள். அவனுக்குத் துளிகூட வலித்துவிடக் கூடாது என்பதுபோல் அவள் செயல்பட்டது அவனுக்குப் பிடித்திருந்தது.

அவன் தன் குரலில் ஒரு கம்பீரத்தை வரவழைத்துக் கொண்டான்.

"கேக்கிறேனில்ல? இது என்ன இடம்?"

"உங்க கால்ல இருந்த புல்லட்டை எடுத்தாச்சி. ஆனா காயம் ஆறக் கொஞ்சம் நாளாவும். அதுவரை நீங்க ஓய்வுலதான் இருந்தாவணும்"

அவனுக்கு அப்போதுதான் கடைசியாக நிகழ்ந்தவை நினைவுக்கு வந்தது. அவன் சுடப் பட்டான். எந்த திசையிலிருந்து என்று கவனிக்கக்கூட வாய்ப்பின்றி மயங்கி விட்டான்.

"இல்ல நா ஒடனே போயாகனும். இது என்ன இடம்னு சொல்லு. பக்கத்தில போன் எங்க கெடைக்கும்?"

அதற்கு அவள் கூறிய பதிலில் அதிர்ந்து போய்விட்டான். ஏனெனில் அவள் கூறிய ஊரிருந்தது எதிரி தேசத்தில். அவன் சண்டையிட்டுக் கொண்டிருந்த பிரதேசத்தின் அருகில். யார் கண்டது. இவளே கூட அந்த தேசத்தின் பெண்ணாயிருக்கலாம். அவன் அவளிடம் என்னவோ கேட்க வாயைத் திறக்க அவள் அவசரமாக கைகளால் பொத்தினாள்.

வாசலில் யாரோ அழைக்கும் ஓசை கேட்டது. வாயில் விரல்வைத்து அமைதியாயிருக்கும்படிச் சைகை செய்துவிட்டு அவள் வெளியேறினாள். வெளியில் சிலவிநாடிகள் பேச்சுக்குரல்கள் கேட்டன. பறவைகள் கீச்சுக்கீச்சென கத்திக் கொண்டிருந்தன. மறுபடி அவள் உள்ளே வந்தபோது சற்று வருத்தத்துடனிருந்ததை கவனித்துக் கொண்டான்.

" இங்க பக்கத்துல போன் எதுவும் கெடையாது. உங்காளுங்க ஒண்ணுவிடாம எல்லாத்தையும் அழிச்சுட்டு போயிட்டாங்க"

"புரியல. சண்டைல யார் ஜெயிச்சது?"

"யாரும் ஜெயிக்கல. உங்காளுங்க பார்டர்லதான் கேம்ப் போட்டு தங்கிருக்காங்களாம். இங்க உள்ளவங்க திட்டம் போட்டுட்ருக்காங்க"

"நீ என்னை ஏன் கொல்லாம காப்பாத்தின?"

"நா ஒரு டாக்டர். நீ குண்டடிபட்டுக் கெடந்தப்ப அப்டியே விட்டுட்டு வரமுடில. அதான். நீ இங்க இருக்கிறதுகூட யாருக்கும் தெரியாது"

அவன் அவளை விசித்திரமாகப் பார்த்தான். இருந்தால் அவளுக்கு முப்பது வயதிருக்கலாம். சிவந்த அவள் உடலில் சில இடங்களில் வெண்மைப் புள்ளிகள் தென்பட்டன. செம்பட்டை நிறத்து அவள் கூந்தல் குட்டையாக கத்திரிக்கப் பட்டிருந்தது.

“உன் வீட்ல உள்ளவங்க ஒண்ணும் சொல்லலியா?”

அவள் வசீகரமாகப் புன்னகைத்துவிட்டுக் கூறினாள்.

“யாரு இருக்காங்க கேட்க. என் வீட்டுக்காரர் இறந்துபோயிட்டார். அவரும் உங்களை மாதிரி சிப்பாய்தான். அது இருக்கும் ரெண்டு வருஷம்”

“கொழந்தைங்க?”

அவள் மவுனமாக வெளியேறினாள்.

அதன்பிறகு வந்த நாட்களில் இருவரும் அதிகம் பேசிக்கொள்ளவில்லை. தினமும் அவள் அவனுக்கு உணவு கொண்டுவருவாள். புண்ணுக்கு மருந்திடுவாள். அங்கிருக்கும் பறவைகளுக்கு தானியங்கள் தூவுவாள்.. மெல்ல மெல்ல அவன் கால் குணமானது. துணிவுபெற்ற ஒருநாளில் அவன் நடக்க முயற்சித்தான். வலியிருந்தது. ஆனாலும் நடக்க

முடிந்ததில் மகிழ்ந்தான்.

ஒருநாள் அவள் கேட்டாள்

"ஒரு சிப்பாயா இருக்கிறதுக்காக என்னிக்காவது வருத்தப்பட்டிருக்கியா ? எதிர்ல நிக்கிற மனுஷங்களை கொல்றதுக்காக சங்கடப்பட்டிருக்கியா?"

"இது ரொம்ப கஷ்டமான கேள்வி. நீ ஒரு பொண்ணுங்கிறதால இப்டி யோசிக்கிறன்னு நெனைக்கிறேன்"

அவள் மவுனமாகப் புன்னகைத்தாள்.

"சரி நா இங்கிருக்கிறது தெரிஞ்சா உன்பக்கத்து ஆளுங்க உன்னை உயிரோட விடுவாங்களா?"

அதற்கும் அவள் பதில் கூறவில்லை. மறுநாள் அதிகாலையில் வந்தவள் அவசரமாக அவனைக் கிளம்பச் சொன்னாள். அவள் தேசத்துப் பட்டாளம் அதிகளவில் வந்துகொண்டிருப்பதாகவும், அங்கிருந்தால் அவன் பிடிபடுவான் என்றும் எச்சரித்தாள். அவனைத் தன்னுடைய காரில் ஏற்றிக்கொண்டு கொஞ்ச தூரம் பயணித்து ஒரு காட்டுப் பகுதியில் இறக்கிவிட்டாள்.

"இதுக்குமேல என்னால உனக்கு உதவ முடியல மன்னிச்சிடு" என்றபோது அவள் கண்கள் கலங்கியிருந்தன. ஒரு சிறிய ட்ராவல் பேகில் உணவுப் பொருட்களும், டார்ச் லைட் மருந்து போன்ற சில பொருட்களும் கொடுத்துவிட்டு அங்கிருந்து கிளம்பிவிட்டாள்.

அவள் சொல்லி விட்டு நகர்ந்தபின்புதான் சட்டென்று நினைவிற்கு வந்தவனாக, காரைப்பின் தொடர்ந்தபடியே ஓடிக் கத்தினான்.

"உன் பேரென்ன?"

கார் ஒரு சிறிய கிறீச்சிடலுடன் நின்றது. அவள் தலையை வெளியில் நீட்டி, தன்னுடைய வழக்கமான புன்னகையை வழியவிட்டபடி காரை வேகமெடுத்து மறைந்துபோனாள். அவன் தனது காலை விந்தியபடி நடக்கத் துவங்கினான்.
*

"அப்புறம்?" என்றேன் நான்

" இப்போது அடுத்த கதை" என்றார் பெரியவர்.

"அய்யோ அதுவே இன்னும் முடியலியே"

அவர் சிலவிநாடிகள் அமைதியாக இருந்தார். காரினுள் ஏஸியின் குளிர்கடந்தும் முன்புறத்து வெயில் உஷ்ணம் கூட்டியது.

கதைக்குள் கதை : 2
***
காலடியோசை கேட்டு அந்தச்சிறுவன் திடுக்கிட்டான்.

"வந்துட்டியா அக்கா?" என்றான்.. பதில் வராதுபோகவே மறுபடி சந்தேகமாக கேட்டான்

" யாரது?"

அதற்கும் பதில் வரவில்லை. அறையின் நிசப்தமும் காற்றின் ஓசையும், தொலைவில் பறவையொன்று கூவும் ஓசையும் மட்டும் கேட்டன. சிறுவன் தனது இருக்கையிலிருந்து மெல்ல சுவரைப் பிடித்தபடியே நடந்து வாசலுக்கு வந்தான். வாசற்படியருகே காலில் ஏதோ இடற, குனிந்து கைகளால் தடவிப் பார்த்தான். யாரோ ஒருவர் விழுந்து கிடப்பது தெரிந்து அதிர்ந்தான். கீழே கிடந்த உருவத்தின் முகத்தில் கைகளால் தட்டி எழுப்பினான்.

"யாரு? யாருங்க? என்னாச்சு.."

உருவம் மெல்ல அசைந்தது கைகளில் தெரிந்தது.

"தண்ணீ... தண்ணீ" என ஈனஸ்வரத்தில் முனகியது கேட்டது. சிறுவன் மறுபடி சுவரைப் பிடித்தபடியே சமையலறை சென்று, பழக்கப்பட்ட இடத்திலிருந்து ஒரு குவளையில் தண்ணீர் கொண்டு வந்தான். வெடுக்கென்று பிடுங்கப்பட்டதில் சற்றே அஞ்சினாலும், வந்தவரின் தாகத்தை அவனால் புரிந்துகொள்ள முடிந்தது.

சற்றைக்கெல்லாம் அந்த உருவம் அவன் கைகளைப் பிடித்துக்கொண்டு படுக்கையறை வரை வந்தது.

"யார் நீங்க ? சாப்பிட எதாச்சும் வேணுமா ? அங்க ஒரு பெரிய பானையிருக்கு. அதுக்குள்ள கொஞ்சம் ரொட்டி இருக்கு. எடுத்துக்கோங்க" என்று ஒரு மூலையைக் காட்டினான். அந்த மூலைவரை சென்ற காலடியோசையில் அந்த உருவம் ரொட்டியை எடுத்திருப்பதை உணர்ந்து கொண்டான். பிறகு அவன் நாசியருகே சிகரெட்டின் நெடி படர்ந்தது.

காலருகே எதுவோ உரச, அவன் குனிந்து தடவினான். அவனது வளர்ப்புப்பூனை. மெல்ல அதைக் கைகளில் எடுத்து மடியில் வைத்து தடவிக் கொடுத்தபடியே கேட்டான்.

"அக்கா வெளிய போயிருக்காங்க. அவங்க இருந்தா டீயாவது வச்சித் தந்திருப்பாங்க. எனக்கு தெரியாது மன்னிச்சுக்கங்க"

இப்போது அந்த உருவம் அவனை நெருங்கி கட்டிலில் அமர்ந்துகொண்டது மெத்தையின் அழுந்தலில் தெரிந்தது. சில விநாடிகளில் சிறுவனுக்கு மருந்து நெடியடித்தது. சமயங்களில் அவன் தடுமாறி விழுந்து சிராய்த்துக் கொண்டால் அக்கா போட்டுவிடும் மருந்தின் வாசனை அது.

"உங்களுக்கு அடி பட்டிருக்கா ? மருந்து வாசனை வருதே?"

அவன் தலைமுடியைக் கோதிய விரல்களை பிடித்துக் கொண்டு கேட்டான்.

" உங்களுக்குப் பேச வராதா? எனக்குப் பார்க்க முடியாத மாதிரி?"

வாசலில் மாடுகளின் கனைப்பொலியும் கழுத்து மணியோசையும் கேட்டு சிறுவன் உற்சாகமானான்.

"அக்கா வந்துட்டியா? ஏன்கா இவ்ளோ நேரம்? நம்ம வீட்டுக்கு விருந்தாளி வந்திருக்காங்க பாரு"

அறையில் தடாரென்று எதுவோ விழும் ஓசையும், அக்காவின் முனகல் ஒலியும் கேட்டது. கட்டிலின் கிரீச்சிடலிலிருந்து பக்கத்திலிருந்த உருவம் எழுந்து கொண்டுவிட்டதென்று உணர்ந்துகொண்டான்.

"அக்கா.... அக்கா... என்னாச்சுக்கா?" என்றபடியே தரையில் ஒரு குழந்தைபோலத் தவழ்ந்து சென்றான். கைகளில் தட்டுப்பட்ட அக்காவின் கால்கள் உதறிக் கொண்டிருந்தன. அவள் முனகல் முன்னிலும் அதிகமாக வெளிவந்தது. சிறுவன் மெல்ல நகர்ந்த அவள் முகத்தைத் தடவினான். அவள் வாயோரம் ஈரமாக வழிந்துகொண்டிருந்தது.

அவன் பயத்தில் அழத்தொடங்கினான். வாசலில் மாடுகள் கத்தத் துவங்கின. மெல்லிய குளிர்காற்று அறைக்குக் நுழைந்ததைத் தொடர்ந்து மழையோசை கேட்டது.

தடார் தடாரென்று குச்சியுடையும் சப்தம் கேட்டது.

"அக்கா என்னாச்சுக்கா உனக்கு? அக்கா என்னை பயமுறுத்தாதக்கா. ஏங்க யாரு இங்க இருக்கிறது? அக்காவுக்கு என்னாச்சு?"

இப்போது அவன் முதுகில் ஆதரவாகத் தடவிய ஒரு கை, அவனை அங்கிருந்து நகர்த்திச் சென்று அமரவைத்தது. பின் அவன் கைகளைத் தரையில் நகர்த்தியது. ஓரிடத்தில் சிறுவனின் கைகளில் அகப்பட்ட பொருள் நீளமாக வழுவழுவென இருந்தது. அதன்பேரிலும் ஈரமாக இருந்தது.

சமையலறையில் அடுப்பு பற்றவைக்கும் ஒலியைத் தொடர்ந்து தண்ணீர் கொதிக்கும் சப்தம் வந்தது. சற்றைக்கெல்லாம் அவன் அக்காவின் விரல்கள் அவன் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டன. அவன் முடிகளைக் கோதிவிட்டன. மழை வலுவாகப் பெய்யத் தொடங்கியது. யாரோ வாசற்படியிறங்கி வெளியேறும் ஓசைகேட்டது.

*

இந்த இடத்தில் பெரியவர் நிறுத்திவிட்டார். கார் வீஜிபியைக் கடந்து சென்றுகொண்டிருந்தது. நான் கேட்டேன்.

"ஆக்சுவலா அந்தப்பொண்ணுக்கு என்னாச்சு சார்?"

" இப்ப அடுத்தது" என்றார்.

"ஏன் இப்டி பாதில பாதில விடுறீங்க?"

அவர் எனக்கு பதிலளிக்காமல் புன்னகைத்தபடியே அடுத்ததைத் தொடங்கினார்.

கதைக்குள் கதை:3
***
அவன் உடல் அசதியில் சோர்ந்துவிழுந்தபோது அவர்கள் நான்குபேர்களும் அவனைச் சுற்றிவளைத்துக் கொண்டார்கள். அவனால் அவர்களை முழுமையாகப் பார்க்கக்கூட இயலாதபடி கண்கள் இருளடைந்து கிடந்தது. இடதுகாலைக் கழற்றியெறிந்துவிட வேண்டும்போல் வலித்தது. அவர்கள் விழுந்து கிடந்த இவனைப் பற்றிப் பரிகாசமாக பேசிச் சிரித்தனர்.

ஒருவன் அவன் தோள் பையினை ஆராய்ந்தான். ஒரு டார்ச் லைட்டும், கத்தியும் சில துணிகளும் ஒரு மருந்துப் புட்டியும் பஞ்சு உருண்டையும், மதுப்புட்டியும் கிடைத்தன.

ஒருவன் கேட்டான்,

"யார் நீ..? இந்தக்காட்டுக்குள்ள என்ன செய்யிற..?"

இவன் சிலகணங்கள் தயங்கினான். கண்களை நான்குமுறை மூடி மூடித் திறந்து கொண்டான்.

"நா ஒரு பிரயாணி. இந்த மாதிரி காடுகள்ல அலைஞ்சு திரிஞ்சு ஆய்வு பண்ணிட்ருக்கேன்"

"கால்ல எப்டி அடிபட்டிருக்கு?"

"வழில ஒரு பாம்பு கடிச்சிடுச்சி"

அவன் கையிலிருந்த ரேடியோப் பெட்டி அலறியது. அதில் யாரோ கரகரப்பாக பேசினார்கள். அவர்கள் தங்களுக்குள் உடனே கிளம்பவேண்டுமென பேசிக் கொண்டே இவனைப் பார்த்தார்கள். பிறகு இவன் உடைகளை அகற்றி நிர்வாணமாக்கி சோதனையிட்டார்கள். இப்போது அங்கே இன்னும் சிலர் வந்தார்கள்.

இவனுக்கான சான்று அட்டைகளோ இன்னபிறவோ இல்லாததில் சந்தேகித்தார்கள். வழியில் அனைத்தும் ஒரு நதி அடித்துச் சென்றுவிட்டதாக இவன் கூறியதை அவர்கள் நம்பத் தயாரில்லை. அருகிலுள்ள உயரமான மரத்தின் உச்சியில் கிளை தாவிக் கொண்டிருந்த மந்திகளைப் பார்த்தபடியிருந்தான் இவன். சிகரெட் பற்றவைத்துக்கொண்ட ஒருவனிடம் கைநீட்டினான் இவன். கோட்டுக்குள்ளிருந்து ஒரு பாக்கெட்டை இவன் பக்கம் எறிந்தான்.

தொலைவில் எங்கோ தொடர்ந்து துப்பாக்கிகள் வெடிக்கும் சப்தம் கேட்க, அவர்கள் அவசரமாக இவனது மதுப் புட்டியை பறித்துக் கொண்டு தன் வழியே சென்றார்கள். இவன் தனது காலை விந்தியபடி நடக்கத் துவங்கினான். அருகில் எங்கோ மாடுகளின் கழுத்துமணியொலி கேட்டது.

***

கார் நீலாங்கரையைக் கடந்து திருவான்மியூரை நெருங்கிக்கொண்டிருந்தது.

"திருவான்மியூர்ல டெர்மினஸ்கிட்ட விட்ருங்க தம்பி. அதுக்குப்புறம் நான் போயிப்பேன்"

"ஆனா நீங்க அந்தக் கதைகளை முழுசாச் சொல்லிருக்கலாம்" என்றேன்

ஆதங்கத்துடன்.

"நாந்தான் எல்லாத்தையுமே சொல்லிட்டனே தம்பி" என்றார்.

அவர் கூறியதின் பொருள் எனக்குப் புரியவில்லை. டெர்மினஸில் இறங்கிக் கொண்டு எனக்குக் கையை நீட்டினார். நான் அவர் கையைப் பிடித்துக் குலுக்கினேன். அவர் மெல்ல அருகிலிருந்த யாரிடமோ என்னவோ கேட்டார். பின்புறத்திலிருந்து பேருந்து ஒன்றுவிடாமல் ஹாரனிக்க நான் காரை நகர்த்தியபடியே ரியர்வியூ மிரரில் பார்த்தேன். யாரோ ஒருவரின் கையைப் பிடித்தபடி சாலையைக் கடந்து கொண்டிருந்தார் பெரியவர்.

# 10.பிழை

ஜட்ஜ் வந்ததும் கோர்ட் சற்று பரபரப்பானது. ஒருவர் வரிசையாக வழக்குகளின் கோப்புகளை எடுத்து வாசிக்க. சினிமாக்களில் வருவதுபோல் வளவள பேச்செல்லாம் இல்லை. பெரும்பாலும் அதே நாளின் அடுத்தமாதத்திற்கான ஒத்திவைப்பாகவே இருந்தன. ராசுவின் தீர்ப்பையும்
மதியத்திற்குமேல் ஒத்திவைத்ததும் அவன் நிகிலை அழைத்துக்கொண்டு வெளியில் வந்தான்.

வெளியில் வந்ததும் நிகில் ஒற்றை விரலைக்காட்டி ஜாடை செய்தான். கோர்ட்டின் ஒருபக்க மூலையில் துருப்பிடித்து தூசியுடன் நின்றிருந்த லாரி மறைவிற்கு அவனை அழைத்துச் சென்றான். பேண்ட் ஜிப்பை திறந்து அவன் மூத்திரம்போக உதவினான். முடித்துவிட்டு அருகிலிருந்த ஒரு சிமெண்ட் பெஞ்சில் இருவரும் அமர்ந்துகொண்டார்கள். எதிரிலிருந்த டீக்கடையில் அடுக்கப்பட்டிருந்த பலகாரங்களைக்காட்டி வேண்டுமா என்பதுபோல் நிகிலிடம் கேட்க, அவன் ஆமோதிப்பாய் தலையசைத்தான். வாங்கிக் கொடுத்ததும் ஆவலுடன் கடிக்கத் துவங்கிய மகனைப் பாவமாக பார்த்தான்.

செல்வி இன்னும் வரவில்லை. அவள் அலுவலகத்தில் பர்மிசன் கிடைக்கவில்லை என்றாள். எப்படியேனும் வந்துவிடுவதாகச் சொல்லியிருந்தாள். அதற்குள் தீர்ப்பு வந்துவிடும். இன்றைக்குள் இது முடிந்துவிட வேண்டுமென்று மனதுக்குள் கடவுளைப் பிராத்தித்தான். ஆறுமாதமாக நிறைய அலைந்தாயிற்று. இந்தச் சிறு பையனையும் அலைய வைத்தாயிற்று. போன் பேசியபடியே வந்த ராசுவின் வக்கீல் போனை அணைத்துவிட்டுச் சொன்னார்.

"இன்னிக்கு முடிஞ்சிரும் சார். கொஞ்சம் அர்ஜண்ட்டா வெளிய போறேன். அஸிஸ்டெண்ட் கிட்ட டீட்டெய்ல் குடுத்திட்டேன். பார்த்துப்பாரு. சாதகமாத்தான் வரும். கவலைப்படாம இருங்க" எனக் கூறிவிட்டு ஸ்விப்ட் காரிலேறிக் கிளம்பிவிட்டார்.

பாவம் நிகில்தான் அதிகம் சிரமப்பட்டுவிட்டான். கோர்ட்டில் சைகை பாஷையில் அவனை சாட்சியாக விசாரித்தார்கள். ராசுவை திரும்பித் திரும்பி பார்த்தபடியே எல்லாக் கேள்விகளுக்கும் தலையசைத்து பதிலளித்தான். அன்று அந்த சம்பவம் நிகழ்ந்திருக்கவே வேண்டாம் என்று நினைத்துக் கொண்டான்.

சற்று தள்ளி அவர்கள் கும்பலாக நின்றிருந்தார்கள். மிகுந்த கொந்தளிப்புடன் இருந்தார்கள். கிராமத்து மனிதர்கள். சம்பந்தப்பட்ட அவன் வரவில்லை. காலை எடுத்துவிட்டதாகச் சொன்னார்கள். உண்டவுணவு செரிக்காமல் தொண்டையில் எரிவதுபோல உணர்வு கவ்வியது ராசுவை. அவர்கள் அவர்களது வக்கீலுடன் பேசிக்கொண்டிருந்தார்கள்.

செல்விதான் கடுமையான மனவுளைச்சலில் இருந்தாள்.

"உன்னாலதான் ராசு. உனக்கு எல்லாமே அசால்ட்டுதான். எவ்ளோதூரம் படிச்சிப்படிச்சு சொன்னேன். நீ வேண்டவே வேண்டாம்னு விலகி வந்தும் ஏன் எங்களை டார்ச்சர் பண்ற? இதே நிகிலுக்கு ஏதாவது ஆயிருந்தா? சாரி ராசு இனிமே நீ நிகிலை மறந்திரு. இந்த கேஸ் முடிஞ்சப்பறம் நாங்க பெங்களூர் போறோம்"

"நா என்ன வேணும்னா செல்வி செஞ்சேன். பட் ப்ளீஸ். இது பெரிய தண்டனை"

"வேற வழியில்ல. உனக்காக இல்ல ராசு. நீ இல்லாம இவன் ஏங்குறான்னுதான் ஒருநாள் உங்கூட அனுப்பி வச்சேன். அதுக்கு நல்ல தண்டனை குடுத்திட்ட. போதும் ராசு எங்களை விட்ரு"

இவன் பேசுவது எதையும் கேட்கின்ற மனநிலையில் இல்லை செல்வி. விவாகரத்தின்போதும்கூட எத்தனையோ பேசிப் பார்த்தான் அசைந்து கொடுக்கவேயில்லை. செல்விக்குப் பிடிவாதம் அதிகம்.

அருகாமைப் பூங்காவில் சற்று சுற்றியபின் நிகிலுடன் மறுபடி கோர்ட்டிற்கு வர, வக்கீலின் உதவியாளர் வந்தார். அவருடன் பேசிக் கொண்டிருக்கும்போதே செல்வியும் வியர்த்த முகத்துடன் வந்துசேர்ந்தாள். 'தீர்ப்பு என்னவாயிற்று' என்று பார்வையாலேயே கேட்டாள். ராசு அமைதியாக இருந்தான்.

உதவியாளர் நிகிலிடம் சைகையில் கேள்விகள் கேட்டார்.

"தம்பி அன்னிக்கி என்னாச்சு?"

அவன் ராசுவை கைகாட்டி வண்டி ஓட்டிக் கொண்டிருந்ததாக சைகை செய்தான்.

" சரி அப்ப நீ என்ன செஞ்சிட்ருந்த?"

"சும்மா உக்காந்திட்ருந்தேன்"

"சரி அப்பறம்?" என்றார் உதவியாளர்.

நிகில் ராசுவை பார்த்தபடியே பதிலளித்தான். ராசு மரமொன்றில் கரைந்து கொண்டிருந்த காகத்தைப் புதிதாகப் பார்ப்பதுபோல் வெறித்துக் கொண்டிருந்தான்.

உதவியாளர் மறுபடியும் கேட்டார்.

"அப்ப நா வந்து ஸ்டேரிங்க புடிச்சி இழுத்தேன். அப்பறம்... அப்பறம்.."

ராசுவின் மனதில் அன்றைய சம்பவம் காட்சிகளாக விரிந்தது. கார் கட்டுப்பாட்டை இழந்து சாலையோரம் இளநீர் விற்றுக் கொண்டிருந்த இளைஞனை இடித்துத் தூக்கியெறிந்துவிட்டு அருகாமை புளியமரத்தில் மோதி நின்றது.

"சரி விடு. எதுக்கு நீ அப்டி செஞ்ச?"

அவன் விழித்தான். செல்வியை திரும்பிப் பார்த்தான். உதவியாளர் மறுபடி கேட்டார்.

"இல்ல தம்பி எதுக்கு நீ ஸ்டேரிங்க புடிச்சி இழுத்த?"

நிகில் இப்போது ராசுவையே பார்த்தபடி இருக்க, அவன் கோர்ட் வளாகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். செல்விதான் கேட்டாள்.

"ஏங்க விசாரணை எல்லாம் முடிஞ்சிட்டதா சார் சொன்னாங்களே?"

"இல்லங்க. இந்த ஜட்ஜ் ஒரு மாதிரி. இருந்தாப்ல திடீர்னு எதாச்சும் கேப்பாரு. எதுக்கும் தயாரா இருப்பம்னு சார்தான் சொல்லிட்டு போனாரு"

"தீர்ப்பு நல்லபடி ஆயிடுங்களா? ரொம்பக் கவலையா இருக்கு. இந்த சின்ன வயசுல இவனை இப்புடி அலைக்கழிக்க வேண்டியிருக்கு"

"அதெல்லாம் கவலையே படாதீங்கம்மா. நிச்சயம் தீர்ப்பு நமக்குத்தான் சாதகமா இருக்கும். குறிப்பா இந்தப் பையன் சாட்சி ஸ்ட்ராங்கா இருக்கு"

எதிர்ப்புறத்தில் குழுமியிருந்த கிராமத்து கும்பலைக் காட்டி செல்வி கேட்டாள்.

"தீர்ப்பு வந்தப்பறம் அவங்களால ஒண்ணும் பிரச்சனை வராதுங்களே?"

உதவியாளர் சிரித்தார்.

"நீங்க அனாவசியமா பயப்படுறீங்க மேடம். எப்டியும் அவங்களுக்கு தேர்ட் பார்ட்டி இன்சூரன்ஸ்ல கிளைம் கெடைச்சிரும்"

செல்வி அந்த கும்பலிலிருந்த மஞ்சள் பணியன் அணிந்த நபரைக் கவனித்தாள். காலிழந்தவனின் அண்ணன் என்றார்கள். அவன் தான் அன்று அதிகம் கோபப்பட்டான். பெருந்தொகை ஒன்றினைக் கொடுத்தே ஆகவேண்டும் என்றான். அவன் இந்தப் பக்கம் திரும்பியதும் செல்வி நிகில் பக்கம் திரும்பிக் கொண்டாள்.

"நீங்க அன்னிக்கே நல்ல அமவுண்டு தரேன்னு சொன்னீங்க. இப்ப தீர்ப்பு நமக்கு ஆயிட்டா அதும் தேவையில்ல. எல்லாம் நல்லதுக்குத்தான் மேடம்" எனக் கூறிவிட்டு உதவியாளர் சென்றுவிட ராசு செல்வியிடம் கேட்டான்.

"பெங்களூர் ஜாப் கன்பர்ம் ஆயிருச்சா?”

"ம்... ம்... இந்த கேஸ் மட்டும் இல்லன்னா எப்பவோ ஜாயின் பண்ணிருப்பேன்"

காற்று சுழன்றடித்து மைதானத்தின் புழுதியை வாரித் தூற்றியது. நிகிலின் தலைமுழுக்க மரமுதிர்த்த சின்னஞ்சிறிய சருகுகளாயிருந்ததை செல்வி தட்டிவிட்டாள்.

மூன்று மணிக்கு மேல் இவர்கள் வழக்கு வந்தது. ஜட்ஜ் தீர்ப்பை வாசித்தார்.

நிகழ்ந்த சம்பவத்தின் அடிப்படையை விசாரித்ததில், நிகழ்ந்தது ஒரு விபத்து மாத்திரமே என்றும், காலிழந்த நபருக்கும் ராசுவுக்கும் எவ்வித முன்விரோதமும் இல்லை என்பதையும் கருத்தில் கொள்வதாகவும், எதிர் தரப்பினர் தங்களுக்கான இழப்பீட்டை ராசுவின் கார் காப்பீட்டு நிறுவனத்தின் மூலம் பெற்றுக்கொள்ள விண்ணப்பித்துக் கொள்ளும்படியும், இனி வரும் காலத்தில் ராசு இவ்விதமாக கவனக்குறைவாக இல்லாமலிருக்கும்படி எச்சரிக்கையும் அந்த தீர்ப்பின் சாராம்சமாக இருந்தது.

ராசுவும் செல்வியும் வெளிவந்தபோது, அந்த மஞ்சள் பனியன் ஆள் முறைத்தபடி நின்று கொண்டிருந்தான். அவர்கள் தரப்புப் பெண்மணி ஒருத்தி சாபம் விடுவதுபோல மண்ணை வாரித் தூற்றினாள். செல்வி ராசுவை முறைத்துவிட்டு வேகமாகச் சென்று தனது காரில்

ஏறிக்கொள்ள நிகில் அவன் கைகளையே பிடித்தபடி நின்றுகொண்டிருந்தான்.

செல்வி மறுபடி மறுபடி ஹாரனடிக்க நிகில் மனமின்றித் திரும்பி நடந்தான். ராசு கைகளைப் பிசைந்தபடி நிற்க, காரில் நுழையுமுன் நிகில் ராசுவைப் பார்த்து சைகை பாஷையில் கூறினான்.

"வண்டி ஓட்டும்போது போன் பேசாதீங்க டாடி".

# 11. ஒரு பனிக்காலம்

குளிரில் அவன் பற்கள் கிட்டித்தன. எப்போதோ எங்கிருந்தோ எடுத்து அணிந்துகொண்ட அடி தேய்ந்த சப்பாத்துகளின் சல்லடைக் கண்கள் வழியே ஈரம் காலை நனைத்தது. கையுறைகளின் கிழிசல் பகுதிகளின் கைகள் சொரசொரத்தன. குருதி உறைந்துவிட்டதெனும் ஐயத்தில் அடிக்கடி மூக்கைச் சொறிந்து கொண்டான். உடைந்த கண்ணாடித் துண்டு ஒன்றில் முகம் பார்த்தான். பலநாள் தாடியில் பழுப்பேறியிருந்தது. ஒன்றிரண்டு நரைமுடிகள்கூட தென்பட்டன.

புழங்காது பாழடைந்த பழைய கட்டிடத்தின் இடிபாட்டுக்குள்தான் அவன் வசிக்கின்றான். துணைக்கு ஒரு எலியும். அவன் அதிகம் யாரிடமும் பேசுவதில்லை. அவ்வப்போது வந்து கீச்சிட்டுவிட்டுச்செல்லும் எலியிடமும்தான். அரையுறக்கத்தில் அவன்மீது ஏறியிறங்கி விளையாடும் எலியை அவன் எதுவும் சொல்வதில்லை.

அணிந்திருந்த நைந்த கோட்டின் உட்பகுதியில் கை நுழைத்து அடிவயிற்றை ஒருமுறை தடவிக்கொடுத்தான். குளிருக்கு இதமான அவன் வயிற்றுச்சூட்டில் கைகள் கொஞ்சம் உணர்ச்சி பெற்றன. அவனுக்கு எமிலியின் ஞாபகம் வந்துபோனது. நிரம்பக்காலம் முன்பு அவன் எமிலியோடு வாழ்ந்த வசந்த நினைவுகளில் பாதி பசிமயக்கத்தில் அழிந்திருந்தன. எமிலிக்கு அவனை நிரம்பப்பிடிக்கும். அவள் பிரிந்துசென்றதுகூட இம்மாதிரி ஒரு குளிர்காலத்தில் தான்.

மிதமிஞ்சிய போதையில் அவன் விட்டெறிந்த ஒயின் போத்தல் மோதி எமிலியின் நெற்றியில் ரத்தம் கொப்பளித்தது.

"ஓ நீ ஒரு நீசன்... உன்னால் என்னுடன் வாழமுடியாது நிக். ஏன் எவராலுமே உன்னுடன் வாழமுடியாது. நீ மிக மோசமான சுயநலக்காரன். நான் உன்னை விட்டுப் பிரிகிறேன்"

அன்று நிக் எமிலியிடம் என்ன பதில் கூறினான் என்பதெல்லாம் இப்போது நினைவிலில்லை. நிக்கின் ஒரேயொரு உறவான அவன் சகோதரன் கரோல் எத்தனையோ சொல்லிப் பார்த்தான். நிக் கேட்கவேயில்லை. எமிலி சென்றபின் கால்களின்  பாதையில் பயணித்து

இந்த நகரத்திற்கு வந்து சேர்ந்தான்.

சிறுவயதின் வாழ்வை நினைவுறுத்தும் இந்த பாழடைந்த கட்டிடம் அவனுக்கு பிடித்திருந்தது. இங்கிருந்து அவனை யாரும் விரட்டவில்லை. கடைவீதியில் ஒரு சுற்று சுற்றிவந்தால் கிடைக்கக் கூடிய சில நாணயங்கள் அவன் பசியைத் தள்ளிவைக்கப் போதுமானதாக இருக்கிறது. மதுவிற்கான அவன் தாகத்தை தணிக்கத்தான் அவன் நிரம்ப மெனக்கெடவேண்டியிருந்தது.

கனவான்களின் பிறந்தநாள் கொண்டாட்டங்கள் வந்தால் நிக்கின் பாடும் கொண்டாட்டம்தான். இறைச்சிகளும் மது எஞ்சிய போத்தல்களும் நிறைந்துகிடக்கும் மாளிகையின் குப்பைத் தொட்டியில். அவற்றின் சேகரம் ஒருவாரம் வரை சமாளிக்கும்படியிருக்கும். எமிலிக்கு அதன்மீதான அருவருப்பில்தான் அவனைப் பிரிவது குறித்த நிர்ப்பந்தம் எழுந்திருக்குமென்று பிறகு தோன்றியது அவனுக்கு.

நிக் எழுந்துகொண்டபோது தலை மிகுந்த பாரமாக இருந்தது. சுவர்மூலை விரிசலிலிருந்து தலைநீட்டிவிட்டு மறைந்தது எலி. இன்று நகர மேயரின் பிரிவுபசாரக் கொண்டாட்டம் என்பதை நேற்றே தெரிந்துவைத்திருந்தான். மேயர் மாளிகை விளக்கொளியால் நிறைந்திருந்தது. வண்ணவண்ணக் கார்களில் வந்திறங்கி உள்ளே நுழைந்துகொண்டிருந்தனர் மேட்டுக்குடியினர். நிக் தனது கோட்டினை மெல்ல உதறிக்கொண்டான்.

வயிற்றின் உஷ்ணம் அதிகரித்தது. மெல்ல மாளிகையின் பின்புறத்தில் சென்று காத்திருந்தான். உடல் பருத்த பணிப்பெண் பெரிய பாலித்தீன் மூட்டையை சுமக்கமாட்டாமல் சுமந்துவந்து தொட்டியில் இட்டாள். அவள் தலை மறைந்ததும் நிக் அதைக்கிளறினான். மதுப்போத்தல்களில் நிறைய மதுவுடன் கிடைத்ததில் அவன் முகம் பிரகாசமானது. இறைச்சிகளின் சதைப்பகுதியை ஆர்வத்துடன் பற்களால் கடித்து மென்றான்.

முடிந்தமட்டும் அள்ளி கோட்டுக்குள் திணித்தபடி வசிப்பிடம் வந்துசேர்ந்தான். வானில் நட்சத்திரங்கள் பார்வைக்குத்தெரியாதபடி பனி மறைத்திருந்தது. கட்டிடத்திற்குள் நுழைந்ததும் புதிய வாசனையை கண்டுகொண்டது அவன் மூக்கு. கிழக்குப்பகுதி மூலையில் சுருண்டுகிடந்தது ஒரு உருவம். அவன் மகிழ்ச்சியை யாரோ பிடுங்கிக்கொண்டதுபோலிருந்தது. தோரணையாக அந்த உருவத்தை நெருங்கினான்.

அது நடுங்கிக்கொண்டிருந்தது.

"யாரது?" என்றான் அதிகாரமாக.

அவள் மெல்ல எழுந்து உட்கார்ந்துகொண்டாள். அவளது சிவந்தமுகம் நிறைய கரும்புள்ளிகளாகs சட்டென்று பார்த்ததுமே அருவருக்கும்படியாக இருந்தது. மிகமெலிதான அவள் உடல் குளிரில் நடனமாடின. அவன் பழைய பொருட்கள் கொண்டு அமைத்திருந்த தனது படுக்கையில் அமர்ந்துகொண்டான். அவள் அவன் கையிலிருந்த இறைச்சியையே இமைக்காமல் பார்த்ததை வைத்து அவள் பசியைப் புரிந்துகொண்டான். கோட்டுக்குள் கைவிட்டு சுமாரான சதைகள் கொண்ட இறைச்சி ஒன்றினை அவள் திசையில் எறிந்தான். குறைவான மது எஞ்சிய போத்தலை உருட்டிவிட்டான்.

காத்திருந்ததுபோல அவற்றை உண்ணத் தொடங்கினாள். பிறகு கேட்டாள்.

" நீங்கதான் இந்த இடத்தோட எஜமானரா?"

நிக் இதைக்கேட்டு இடிபோல வெடித்துச் சிரித்தான்.

"என்ன கேட்டாய் எஜமானனா ? ஹஹ்ஹா ஆமாம் நாலு வருசமா இங்க நா மட்டுந்தான் இருக்கேன். ஓ மறந்துட்டேன். அதோ அந்த மூலைல இருக்கே ஒரு துளை. அதில் என் எலி நண்பனும் இருக்கான்"

அவள் புன்னகைத்தபடியே உண்பதில் சிரத்தையாக இருந்தாள். நிக் தனது படுக்கையின் அடியிலிருந்து அணைத்து வைக்கப்பட்ட சுருட்டு ஒன்றை எடுத்துப் பற்றவைத்துக் கொண்டான். அவள் அதையும் ஆர்வமுடன் பார்க்க அவளுக்கும் ஒன்றினை வீசினான். அவளும் புகை வழியவிட்டபடி விட்டத்தைப் பார்த்தாள்.

"நான் இங்கேயே தங்கிக்கலாமா?"

" இல்ல அது நிரம்ப சிரமம். எனக்கு மனுசங்கன்னா அலர்ஜி. தனியா இருக்கத்தான் புடிச்சிருக்கு எனக்கு"

"ஆனா மனுசங்களால எப்புடி தனியா இருக்க முடியும்?"

அவன் முகம் புன்னகையிழந்து இறுகியது.

" நாம தனியாத்தான் வாழுறோம். அதுதான் நெசம். அதான் நல்லதும் கூட. ஏன்னா தனியா இருக்கும்போது மட்டுந்தான் மனுசன்

நடிக்கிறதில்ல''

அவள் சுருட்டை ஒருமுறை ஆழமாக இழுத்துவிட்டுச் சொன்னாள்.

''ரொம்ப அதிசயமா பேசுறீங்க''

''இங்க அதிசயம்னு எல்லாம் எதுவுமேயில்ல. நடைமுறைக்கு வரவரை அப்படித்தோனும் அவ்வளவுதான்''

''உங்க வாழ்க்கைல நிறைய அனுபவிச்சிட்டீங்க போல. எதுமேலயுமே நம்பிக்கையில்லாம பேசுறீங்க''

நிக் அமைதியாக ஒரு மூலையைப் பார்த்தபடி உதடுகளில் புகையை வழியவிட்டான். அவள் எழுந்துகொண்டபோது வலதுகாலின் ஆடுதசையில் பாதியை புண் அரித்துப் புரையோடியிருந்தது. மிகுந்த சிரமத்துடன் சாய்வாக நகர்ந்தாள்.

''எங்க கௌம்பிட்ட?"

'' நீங்கதான் தனிமை விரும்பின்னு சொல்லிட்டிங்களே''

''ஆனா நா ஒன்னும் கொடுமைக்காரன் இல்ல. இந்த பனி ராத்திரில, எங்கபோயி தங்குவ ? நாளைக்கு பகல்ல வேற எடம் பார்த்துட்டு போயிக்க''

அவள் சற்றுக்குழம்பிவிட்டு மறுபடி பழைய இடத்தில் உட்கார்ந்துகொண்டாள். அவள் புண்ணில் ஈக்கள் மொய்த்தன. நிக் விட்டென்றிந்த ரொட்டியை காவிக்கொண்டு துளைக்குள் ஒளிந்துகொண்டது எலி.

நிக் கேட்டான்,

''சரி சொல்லு என்ன உன் கதை. நீ எப்புடி இந்தமாதிரி ஆன? சொந்தக்காரங்க யாருமில்லயா ஒனக்கு?"

அவள் முகத்தில் விசித்திரமான பாவனை தோன்றியது.

''அதெல்லாம் என்னத்துக்கு ? அநாதையா சுத்துற எல்லாத்துக்குந்தான் ஏதாவது கதையிருக்கும். இப்புடி ஆயிட்டோம் அவளோதான்''

அவன் ஏளனமான குரலில் சொன்னான்.

''நீகூட ரொம்ப விரக்தியாத்தான் பேசுற''

அவள் இந்தப்பேச்சை விரும்பவில்லை என்பதுபோல முகத்தை வைத்துக் கொண்டாள். பிறகு சொன்னாள்,

"இந்த இடம் ரொம்ப நல்லாயிருக்கு இல்லையா?"

" ஆமா... நா ரொம்பநாள் ரயில்வே ஸ்டேஷன்லதான் தங்கிருந்தேன். அங்க போலீஸ்காரங்க தொல்லை அதிகம். அதோட எப்பவும் மனுசங்க நடமாடிட்டே இருப்பாங்க. இங்க வந்தப்பறம்தான் மனசுக்கு நிம்மதியா இருக்கு"

"நம்மளோட சொந்தமான வீட்டுல இருக்கிறது மாதிரி. இல்லையா?"

" சரியா சொன்ன" என்றபடி மற்றொரு துண்டு சுருட்டைப் பற்றவைத்துக்கொண்டான்.

"ஆனா இத்தனை அழகான வீடு எப்புடி இப்புடி பாழாயிருக்கும்?"

" எனக்கும் தெரியல. உனக்கும் எனக்கும் இருக்கிறமாதிரி இந்த வீட்டுக்கும் ஏதாவது கதை இருக்கலாம். வீட்டுக்கு என்ன வாயா இருக்கு சொல்லிப்புலம்ப"

இரவும் பனியின் அடர்த்தியும் நகர்ந்தபடியே இருந்தது. நிக் எழுந்துசென்று கனப்பு அடுப்பிற்குள் சில அட்டைகளைக் குவித்து எரியூட்டினான். இருவரும் சற்று நகர்ந்து அனலில் கைநனைத்துக்கொண்டார்கள்.

"ஏன் அட்டைகளை எரிக்கறீங்க ? மரக்கட்டைங்கன்னா நல்லா எரியுமே?"

"எனக்கு மரங்கள்னா ரொம்பப் பிரியம். என் அப்பா ஒரு தச்சர். எங்க வீடு முழுக்க அவர் இழைத்த மரச் சுருள்கள் அலைஞ்சபடியே இருக்கும். சின்னப் பையன்ல எனக்கும் அதில ரொம்ப ஆர்வம் இருந்திச்சு. நிறைய பொம்மைகள் எல்லாம் மரத்தில செய்வேன். ஆனா பெரியவனாக ஆக மரங்களை அறுக்கிறது பெரிய பாவமா பட்டது எனக்கு. அந்தத் தொழில விட்டுட்டேன்"

அவள் அவனை விசித்திரமாகப் பார்த்தாள்.

"வித்தியாசமா இருக்கு நீங்க சொல்றது"

அவன் அனலில் கையசைப்பதில் தீவிரமாக இருந்தான். சிலவிநாடிகள் இரவின் ஓசைமட்டும் கசிந்தது அங்கே.

அவள் மவுனத்தை உடைத்தாள்.

"இந்த சுவத்துல இருக்கிற கிறுக்கல்களை வச்சுப்பார்த்தா இந்த வீட்டில நிறைய குழந்தைங்க இருந்திருக்கனும்"

"இருக்கலாம்"

எப்போது உறங்கினார்கள் என்று இருவருக்குமே தெரியவில்லை. காலையில் நிக்தான் முதலில் விழித்துக் கொண்டான். அவள் இன்னும் எழுந்திருக்கவில்லை. அன்றைய தனது நாள்பற்றி அவன் சிந்திக்கத் தொடங்கினான். இதற்குமுன்பு அவன் இப்படியெல்லாம் யோசித்தவனில்லை. அவள் வருகை தன்னில் ஒரு சிறிய சலனத்தை தோற்றுவித்திருக்கிறது என்பதை உணர்ந்துகொண்டான்.

மெல்ல அவளை எழுப்பினான். அவள் முனகியபடி திரும்பிக் கொண்டாள். யோசனையுடன் நகர்ந்தவனிடம் சொன்னாள்.

"எனக்கு ரொம்பப் பசிக்குது. சாப்பிட ஏதாவது கெடைக்குமா ப்ளீஸ்?"

சூரியனின் மங்கலான வெளிச்சம் மேற்கூரையின் துளைகள்வழியே விழுந்தபடியிருந்தது. நிக் வெளியேறி கடைத்தெருவருகே வந்தான். பெரிய டிஜிட்டல் பேனர்களில் அதிபர் சிரித்துக் கொண்டிருந்தார். உணவுவிடுதிகள் எதுவும் திறந்திருக்கவில்லை. திறந்திருந்தாலும் இவனிடமிருந்த சொற்ப நாணயங்களுக்கு எதுவும் கிடைக்கப் போவதில்லை. அவன் விடுதியின் பின்புறமாக சென்றான். ஒரு ஓரத்தில் குப்பைகள் எரிந்துகொண்டிருந்தன. விடுதிப் பணியாள் ஒருவன் நீண்ட தடிவைத்து நெருப்பை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தான். இவனைக்கண்டதும் அவன் முகம் சுருங்கியது.

"ஏய் இங்க எல்லாம் வரக்கூடாதுன்னு உனக்குத்தெரியாதா?"

"இல்ல சாப்பிட பழைய பிரட்டுகள் பழங்கள் ஏதாச்சும் கிடைக்குமான்னு"....

"அதெல்லாம் ஒங்கிட்ட குடுத்துட்டா நாங்க என்ன செய்யிறதாம் ? நீ வேற எங்கயாச்சும் போயி தேடு போ" என்றபடி மீண்டும் நெருப்பில் கவனம் செலுத்தினான்.

அங்கிருந்து நகர்ந்து செல்கையில் பாலத்தினடியில் உறைந்துகிடந்த நதியில் சிறுவர்கள் சிலர் ஸ்கேட்டிங் பயின்று கொண்டிருந்தார்கள். வெளியூர் பிரயாணிகளிடம் கொத்துக்கொத்தாக கேரட்டுகள்

விற்றுக்கொண்டிருந்தனர் சில இளைஞர்கள். தலையில் ஹெல்மெட்டுடன் சைக்கிளோட்டிய சிறுவனின் மோதலிலிருந்து தப்பித்து, குடியிருப்பு பகுதிக்குச் சென்றான்.

ஒரு வீட்டின் வாசலில் ஜன்னலை சுத்தியலால் தட்டிக்கொண்டிருந்தார் ஒரு கிழவர். இவன் அருகில் சென்று அவரையே பார்த்துக்கொண்டிருந்தான். திரும்பி இவனைப்பார்த்ததில் சுத்தியல் தவறி அவர் கைகளில் பட்டது. அவர் கையை உதறிக்கொண்டார்.

"நா வேனும்னா உதவட்டுமா பெரியவரே?"

" உனக்கு இந்த வேலை தெரியுமா?"

அவன் பதில்கூறாது அவரிடம் சுத்தியலைப்பிடுங்கி பணிபுரியத்துவங்கினான். பணி அதிகமில்லை. ஜன்னலின் கதவுகளை நிரந்தரமாக பலகை வைத்து அடைக்கவேண்டும் அவ்வளவுதான். பணி முடிந்ததும் பார்வையிட்டு திருப்தியடைந்த கிழவர் அவனை வீட்டின் பின்புறம் அழைத்துச்சென்றார். அங்கே பழைய குதிரை வண்டி கிடப்பிலிருந்தது.

"இதை உன்னால சரி செஞ்சு தரமுடியுமா?"

" முடியுங்க. ஆனா எதுக்கு ? இப்பத்தான் இதை ரோட்டில ஓட்ட சர்க்காரில் அனுமதியில்லையே?"

"அதைப்பத்தி உனக்கென்ன ? உன்னால முடியாட்டி சொல்லு"

"இல்லங்க. நா செஞ்சிடுவேன். ஆனா நாளைக்கு வரேன். இப்ப வீட்டுக்குப்போவனும்"

"சரி நாளை காலை வா" என்றபடி உள்ளே சென்று சில நாணயங்களை எடுத்துவந்து கொடுத்தார். அவன் மகிழ்ச்சியுடன் வாங்கிக்கொண்டு திரும்பும் வழியில் விடுதி திறந்திருந்தது. ரொட்டிகளும் கிரீம் போத்தலும் வாங்கிக்கொண்டு வசிப்பிடம் நோக்கி நடந்தபோது வெயில் இறங்கத்தொடங்கியது.

# 12.தண்ணீரில் தத்தளிப்பவன்

என் நிலையை புரிந்துகொள்வது உங்களுக்கு சற்று சிரமமாகத்தான் இருக்கும். ஆனால் இதுதான் நிஜம். அவனை ஒரு அடகுக் கடையில்தான் சந்தித்தேன். நான் யார்  என்ன என்னும் வியாக்கியானங்களெல்லாம் வேறொரு சந்தர்ப்பத்தில் சாத்தியப்பட்டால் விளக்குகின்றேன். இப்போது அடகுக்கடை.

அவன் ஆள் ஒரு மார்க்கமாக இருந்தான். என் மனைவியின் தாலியை அடகுவைக்க சென்றிருந்தேன். பொதுவாக நகைகளை அடகுவைப்பவர்களை புழுபூச்சிகள் போலத்தான் பார்ப்பார்கள். கொத்தாக நெக்லஸ் ஒட்டியானம் மாதிரி பெரிய ஐட்டங்களாக அடகு வைக்க சென்றால் பேங்கிற்குத்தான் செல்வார்கள்.

இது தாலியாயிற்றே. அங்கெல்லாம் செல்ல நேரமோ விருப்பமோ வாய்க்கவில்லை எனக்கு. தாலியை வாங்கி பார்த்துவிட்டு அல்ரெடி இங்கு வைத்திருக்கிறீர்களா என்று கேட்டார்கள். இல்லையென்றதும் யாரேனும் தெரிந்தவர்களை அழைத்துவா என்று சொல்லிவிட்டார்கள். செய்வதறியாமல் தாடையை சொறிந்துகொண்டிருந்தபோதுதான் அவன் அங்கு வந்தான்.

அவன் பிறகு, முதலில் தாலி. ஒருவன் தாலியை அடகு வைக்கின்றான் என்றால் அதைவிட அவன் ஏழ்மையை பறைசாற்ற வேறு எதுவும் தேவையில்லை. வறுமை என்று சொல்ல மனம் ஒப்பாததால் ஏழ்மை என்கிறேன். அவன் உள்ளே நுழைந்து என்னருகில் உட்கார்ந்து கொண்டான். கடை சற்று பிஸியாக இருந்தது.

நான் எழுந்துகொண்டேன். வெளியே வந்து அருகிலுள்ள டீக்கடையில் டீ சொல்லி சிகரெட் பற்றவைத்துக்கொண்டேன். கையிலிருந்த இருபது ரூபாய் காலி. நீங்கள் நினைக்கலாம், இந்த சிகரெட் சமாச்சாரத்தையெல்லாம் விட்டுவிட்டால் நிறைய சேமித்து உருப்பட்டுவிடலாம் என்று..

இருப்பதே அந்த ஒரு பழக்கம்தான். அதுவும் பொறுக்கவில்லையா ? பக்கத்திலிருந்த ஒரு கோவில் திண்ணையில் நிழலில் ஒன்றிரண்டு ஆடுகள் படுத்திருந்தன. அருகில் நான் உட்கார்ந்தபோது அவை

என்னை தடைசெய்யவில்லை. இந்த ஆடுகள் மாதிரி இருந்தால் நன்றாக இருந்திருக்கும். வேலை காசு பணம் அடகு கல்யாணம் வீட்டுவாடகை பால்பணம் குழந்தைவளர்ப்பு பள்ளிக்கட்டணம் மொய்கள் எதுவும் தேவையில்லை.

கிடைத்த கிளையில் இலைதின்று கிடைக்கும் நிழலில் அசைபோட்டு நிம்மதியான வாழ்வு. அருகில் நிழலாட அவன் நின்றிருந்தான். என்ன என்பதுபோல் பார்த்தேன். அவன் எனக்கருகில் மெலிதாக என்னை உரசியபடி உட்கார்ந்துகொண்டான். நான் எதுவும் பேசும் மனநிலையிலில்லை. அடகு வைப்பதற்குக்கூட தெரிந்தவர்கள் யாரேனும் வேண்டுமாம். எனக்கு இங்கு யாரையும் தெரியாது. தெரிந்துகொள்ளவில்லை.

எதற்கு அங்கே உட்கார. அதுதான் எழுந்து வந்துவிட்டேன். எனக்கு அழவேண்டும்போலிருந்தது. வாய்விட்டு மனம்விட்டு அழவேண்டும். அதற்கு தனிமை வேண்டும். அதற்குக்கூட வழியில்லாமல் அருகில் வந்து உட்கார்ந்துகொண்டிருக்கிறான் எவனோ ஒருவன். எனக்கு எல்லையில்லாத கோபம் வந்தது.

"என்ன பிரச்சனை உனக்கு?” என்றான்.

"அத தெரிஞ்சு நீங்க என்ன செய்யப்போறீங்க ? போங்க சார். உங்க வேலையப்பாருங்க"

"ஏன் இவ்ளோ வெறுப்பா பேசுற?”

எனக்கு வந்த ஆத்திரத்திற்கு அளவேயில்லை. என் பாக்கெட்டிலிருந்த பேப்பர் சுருளை எடுத்து அவனிடம் காண்பித்தேன்.

"இது என்ன தெரியுமா? என் பொன்டாட்டி தாலி. இதான் என் வீட்ல இருந்த கடைசீ தங்கம். இத அடகு வச்சா ரெண்டாயிரம் ரூவா கெடைக்கும். அதவச்சுத்தான் ஒருத்தனுக்கு வட்டி கட்டனும். அப்பவும் பத்தாது. புள்ளைக்கி பால்பணம் கட்டாம ரெண்டிநாளா நிப்பாட்டிட்டான். ஊட்ல அரிசி காலி. இதான் என் நெலமை. கோவப்படாம?”

"புரியுது"...

" என்ன புரியுது ? அதெல்லாம் ஒன்னும் புரியாது. வார்த்தையா புரியறது இல்ல. வாழ்க்கை புரியனும்" என்றபடி பாக்கெட்டில் அணைத்துவைத்திருந்த பாதி சிகரெட்டை பற்றவைத்துக்கொண்டேன்.

அவன் என்னையே புன்னகையுடன் பார்த்துக்கொண்டிருந்தான்.

"உனக்கு ஒரு கதை சொல்றேன்" என்றவனை சற்றே அசூசையாக பார்த்தேன். யாரிவன் ? எதற்காக என்னுடன் வந்து உட்கார்ந்துகொண்டிருக்கிறான் ? என்றெல்லாம் யோசித்தபடி சிகரெட்டை இழுத்தபடியிருந்தேன்.

"என்ன கதைவிடப் போறீங்க?"

"தண்ணீரில் தத்தளிப்பவன் கதை"

நான் என் மொபைலை எடுத்துப்பார்த்தேன். இன்னும் நேரமிருக்கிறது. அவன் சொல்லும் கதையை கேட்க பெரிதாக ஆர்வமில்லை எனக்கு.

"ஒன்னு சொல்றேன் கோவிச்சுக்காதீங்க பாஸு. நீங்க சாப்டீங்கன்னு நெனைக்கிறேன். நா இன்னும் சாப்பிடல. வீட்ல அரிசிக்கிக்கூட வழியில்ல. கதை கேக்கனும்னாகூட காதுல பசியடைஞ்சிருக்கும்போது சாத்தியமில்ல"

"நீ மொத உன் பிரச்சனைகளை சரியா பார்க்க கத்துக்கோ. என்னமோ உனக்கு மட்டுந்தான் உலகத்துல பிரச்சனை இருக்கிற மாதிரி?"

"ஹஹ்ஹஹ்ஹா நா அப்டீன்னு சொன்னனா உங்ககிட்ட ? ஒடனே அட்வைசுக்கி கெளம்பிருவீங்களே"

"அட்வைஸ்ன்றதை ஏன் தப்பா நெனைக்கிற ? அது தகவல்கள்தான். அதோட அடிப்படைல இருக்கிறதுகூட அன்புதான்"

நான் சிகரெட்டினை முழுதாக இழுத்து வீசியெறிந்துவிட்டு ஒரு கொட்டாவி விட்டேன்.

"இந்த உலகத்துல எல்லாருக்குமே பிரச்சனைகளும் வருத்தங்களும் இருக்கத்தான் செய்யுது"

"பாஸ் பாஸ்.. போதும் நிறுத்திக்கங்க. நானே மூச்சுவிடாம மூனுமணிநேரம் பாஸிட்டிவ் ஆட்டிட்யூட் பத்தி பேசுவேன். பிராக்டிக்கலா செட்டாவற மாதிரி எதாவது இருந்தா சொல்லுங்க. இல்ல கெளம்புங்க"

அவன் இப்போது விசித்திரமான ஒரு காரியம் செய்தான். சட்டென்று தான் கட்டியிருந்த லுங்கியை விலக்கி தன் இடதுகாலை காட்டினான். அங்கே தொடைக்குக்கீழே மரக்கால் இருந்ததைப்பார்த்து

மிரண்டுவிட்டேன்.

"என்னாச்சு" ? என்றேன் அவனிடம்.

"கார்கில் வார்ல ஒரு தோட்டா பாஞ்சிருச்சி மொழங்கால்ல. ரிமூவ் பண்ணமுடியாம உள்ளயே இருந்து கொஞ்சகொஞ்சமா அரிச்சு முழு காலையும் எடுக்கவேண்டியதா போயிடுச்சி"

சட்டென்று எனக்கு அவன் மீது ஒரு பரிவும் மரியாதையும் வந்தது. அவனை நன்றாக கவனித்தேன். ஷேவ் செய்யப்படாத நரைமீசை தாடி முகம். மெலிதாக தலையில் வழுக்கத்தொடங்கியிருந்தது.

"காலை எடுத்தது தெரிஞ்சப்ப எனக்கிருந்த மனநிலை கொடுமை. என் கர்னல் ஒருத்தரு. ஹிந்திக்காரரு. அவருதான் என்னை மீட்டு கொண்டுவந்தாரு"

நான் அமைதியாக இருந்தேன்.

"ஒலகத்துல தீராத பிரச்சனைன்னு ஒன்னு இல்லவேயில்ல. சிலதுக்கு கொஞ்சம் டைமெடுக்கும் அவ்ளோதான். தேவையெல்லாம் பொறுமையும் காத்திருப்பும்தான்"

"ஹஹ்ஹஹா அந்த டைம் நம்மகிட்ட இல்லைன்றதுதான் பிரதர் பஞ்சாயத்தே"

இப்போது அவன் சிரித்தான்.

"தி டைம் இஸ் எ இல்யூஷன். இட்ஸ் ஆல்வேஸ் டிப்பென்டிங் அவர் விஷன். நாம இருக்குறவரைதான் நமக்கான டைமும் இருக்கும். டைமை உருவாக்குறதும் அழிக்கிறதும்கூட நம்ம கைலதான் இருக்குன்றது நமக்கு தெரியாததுதான் பிரச்சனை. பொறுமைதான் இல்ல நம்மகிட்ட"

"இன்னும் அரைமணி நேரத்துல என் கடன்காரன் வீட்டுக்கு வந்துருவான் வட்டிப்பணம் வாங்க. பொறுமை எனக்கிருந்து என்னா செய்ய ? அவுருக்கு இல்லியே?”

"சும்மா கடன் குடுத்தவன் மேல பழிபோடாத. ஒன்னு : எந்த கடன் காரனும் நம்மளை வற்புறுத்தி நமக்கு கடன் தரதில்ல. ரெண்டு : அவன் சொல்ற தவணைக்கு முன்னாடி நிச்சயம் அவன் நம்மளை தொந்திரவு தரதும் இல்ல. நாம லேட் பண்ணிட்டு அவங்களை திட்டி என்ன செய்ய?”

எனக்கு அவன் லாஜிக்கில் இருந்த நியாயம் புரிந்தது.

"உன் தேவைக்கு நீ கடன் வாங்குற. உன்னால திருப்பமுடியுமா முடியாதான்னு நீதான் யோசிச்சிருக்கனும். உன்னால முடியாமப்போனதுக்கு கடன் குடுத்தவன் என்ன செய்வான்?"

"ஆமாம் பாஸு. பொண்டாட்டிக்கி ஒடம்புக்கு முடியாம ஆப்பிரேஷனுக்கு படுத்திருக்குறப்ப, நமக்கு திருப்பித்தரமுடியுமான்னா யோசிக்கமுடியும் ? இல்ல செலவுகள் எல்லாம் நம்மகிட்ட சொல்லிட்டுத்தான் வருதா?"

"பாரேன் மறுபடி இப்ப சூழ்நிலைமேல பழிபோடுற. இதையெல்லாம் நீதானே முன் கூட்டியோசனை பண்ணி சேமிச்சு வச்சிருக்கனும் ? வாழ்க்கையப்பத்தின சரியான திட்டமிடலோ, வாழ்வதற்கான புத்திசாலித்தனமோ வளத்துக்காம யாரையாவது எதையாவது பிளேம் பண்ணியே வாழ பழகிட்டோம்"

ஒருவகையில் அவன் சொன்னது உண்மை. அலட்சியமாகவே வாழ்க்கையை எதிர்கொண்டது என் பிழைதான்.

"உனக்கு இருக்குற பிரச்சனைகள் தீரவே தீராதுன்னு இல்ல. அது தீரதுக்கு கொஞ்சம் டைமெடுக்கும். அதுக்கு நீ புத்திசாலித்தனமா யோசிச்சாலே போதும். கோடிகோடியா கடன் வச்சிகிட்டு சிரிச்சுக்கிட்டே சுத்துறவங்க பலபேர் இருக்காங்க நாட்ல. மொத பிரச்சனைகளை சரியா பாரு. அந்த வளையத்துல இருந்து எப்டி வெளிய வரலாம்னு யோசி. நியாமா நேர்மையா குறுக்கு வழியில்லாம நடக்குறது லேட்டாகத்தான் செய்யும். ஆனா கன்டிப்பா ஒருநாள் கரைசேரலாம். காத்திருக்கனும். ரொம்ப பொறுமையா காத்திருக்கனும்"

எனக்கு தலையை தண்ணீருக்குள் முக்கிமுக்கி எடுப்பதுபோலிருந்தது. தலையை உதறிக்கொண்டேன்.

"ஒருத்தன் தண்ணீயில தத்தளிச்சிக்கிட்டிருந்தான். அந்த பக்கமா பரிசல்ல போயிட்டிருந்தாரு கடவுள். கடவுளை பார்த்ததும் அவன் சத்தமா கத்த ஆரம்பிச்சுட்டான். யோவ் கடவுளே. நா இங்க சாவக்கெடக்கேன் கண்ணுக்கு தெரியலையான்னு கேட்டான். கடவுள் சிரிச்சுக்கிட்டே,

"மொத நீ எப்புடி இங்க வந்து மாட்டிக்கிட்ட?"

"யோவ் அதெல்லாம் எனக்கு ஞாபகமில்ல. அதுக்கு நேரமுமில்ல. எப்டியாச்சும் என்னிய காப்பாத்து"

கடவுள் மறுபடி சிரித்தார்.

"யோவ் சிரிக்காதய்யா. எனக்கு நீச்சல்கூட தெரியாது. ப்ளீஸ் கொஞ்சம் கைதூக்கிவிடு"

"நீ மொத எந்திரிச்சு நில்லு" அப்டீன்னாரு கடவுள்.

"யோவ் லூசாய்யா நீ ? தண்ணி ஆழம்யா. நின்னா முழுகிருவேன்"

கடவுள் கேவலமான ஒரு வசவு வார்த்தையை அவன்திசையில் வீசினார்.

"எந்திரிச்சு நில்லு. அதான் ஒரே வழி" அப்டின்னு சொல்லிட்டு துடுப்பை போட்டு நவுந்து போயிட்டாரு. அவன் கடவுளை கன்னாப்பின்னான்னு திட்டினான். இனிமே உன்னை கும்பிடுறனா பாருன்னு சபதம் எடுத்துக்கிட்டான்.

கை கால் எல்லாம் பயங்கரமா டயர்டாயிருச்சி அவனுக்கு. மூக்கு வாயெல்லாம் தண்ணி பூந்திடுச்சி. கிட்டத்தட்ட தான் சாகப்போறம்னு அவனுக்கு தெரிஞ்சிருச்சி. செத்துபோன தாத்தா பாட்டியெல்லாம் கண்ணுக்கு தெரிஞ்சாங்க. சுத்திலும் பார்த்தான் ஒரு காக்கா குருவிகூட இல்ல. ரொம்ப நொந்துபோயி அழ ஆரம்பிச்சான். டக்குன்னு என்னமோ தோனுச்சி அவனுக்கு. கடவுள் சொன்ன மாதிரி எந்திரிச்சு நின்னுதான் பார்ப்பமேன்னு காலை தரையில ஊனி முயற்சி பண்ணான். காலுக்கு கீழ மண்ணு வழவழன்னுச்சு. இப்ப தண்ணி அவன் கழுத்துவரை இருந்துச்சி. அப்பத்தான் அவன் யோசிச்சான், அட மடப்பயலே இத்தனைநேரம் ஆழமில்லாத தண்ணியிலயா தத்தளிச்சு அழுது ஒப்பாரி வச்சம்னு சிரிப்பு வந்திடுச்சி அவனுக்கு. நடந்து கரையேறிப்போயிட்டான்"

"நான் கதை சொன்னவனையே பார்த்துக்கொண்டிருந்தேன். எனக்கு இதுமாதிரி நிறைய நம்பிக்கை கதைகள் முன்பே கேட்டிருந்தாலும், இது கொஞ்சம் தெம்பாகத்தான் இருந்தது."

"நம்ம பிரச்சனைகள் எல்லாமே இப்டித்தான். நாம எந்திரிச்சி நிக்கிறவரை தத்தளிப்பாத்தான் இருக்கும். போயி எல்லா பிரச்சனைகளையும் எப்புடி சமாளிக்கலாம்னு யோசி" என்ற படி அவன் எழுந்துகொண்டான். பிறகு ஒருபக்கமாக சாய்ந்துகொண்டபடி நடக்கத்தொடங்கினான்.

"பாஸு உங்க பேரு?”

"கடவுள்னு வச்சிக்கயேன்" என்றபடி அவன் திரும்பி என்னைப்பார்த்து சிரித்தான்.

நானும்தான்.

# 13. சருகு

தொலைக்காட்சியில் யாரோ ஜோதிடர் உரத்த குரலில் பலன்கள் கூறும் ஓசைகேட்டு விழித்துக்கொண்டார் சதாசிவம். எழுந்தமர்ந்து கண்களை கசக்கிக்கொண்டு பார்க்க கழுத்து நிறைய மணிமாலைகளுடன் எட்டாமிடத்தில் குரு என்பதுபோல பேசிக்கொண்டிருக்க, ஞாயிறன்றேனும் இவர்கள் விடுமுறை விட்டால் நன்றாக இருக்குமென்று எண்ணிக்கொண்டார். சமையலறையில் உருளும் பாத்திரங்களின் ஓசையில் மனைவி உள்ளிருப்பதும் அவளிருக்கும் மனநிலையையும் நன்றாகவே புரிந்துகொள்ளமுடிந்தது.

முந்தைய தினம் நிகழ்ந்த அனைத்தும் ஒரு கசப்புபோல மெல்லமெல்ல நினைவில் வந்து அப்பிக்கொண்டது. இருந்தும் அவளை சற்று அதிகமாகவே கடிந்துகொண்டுவிட்டோமோ எனும் குற்றவுணர்வு அவருக்கு சங்கடத்தை கொடுத்தது.

எழுந்து மெத்தை தலையணையை சுருட்டி படுக்கையறைக்குள் கொண்டுவைத்துவிட்டு கட்டிலை பார்த்தார். அப்பா ஒரு குழந்தையைப்போல வாய்பிளந்து உறங்கிக்கொண்டிருந்தார்.

இரண்டு ஆண்டுகளாயிற்று. பக்கவாதம். அதுவும்கூட ஒரு ஞாயிறுதான்.. திடுமென நூலகத்திலிருந்து ஆட்டோ ஏற்றி அழைத்துவந்தார்கள். எதையோ வாசித்துக்கொண்டேயிருந்தவர் சட்டென விழுந்துவிட்டார் என்றார்கள். பிறகு மருத்துவமனைக்கு அழைத்துச்சென்று என்னென்னவோ பரிசோதனைகள் அது இதுவென அலைக்கழிந்தபின் விஷயத்தை கூறினார்கள். வயதாகிவிட்டதால் சகஜநிலைக்கு மீட்டெடுப்பது சிரமமென்றார்கள். அம்மாதான் பாவம் அதிர்ந்துபோய்விட்டாள். ஆனால் சட்டென்று அவள் சமாளித்துக்கொண்டதுதான் இவருக்கு பெருத்த ஆச்சர்யம்.

அப்பாவையே சில நொடிகள் பார்த்தபடி நின்றிருந்தார். பல்துலக்கி முகம் கழுவுகையில்,வீட்டை ஒட்டடையடிப்பது, வாகனத்தை கழுவிவைப்பது, பழைய செய்தித்தாள்களை அடுக்கி மூட்டைகட்டுவது, அப்பாவை குளிக்கச்செய்வதென ஒரு ஞாயிறுக்கான அனைத்து பணிகளும் அவருக்காக காத்திருப்பது நினைவுக்கு வந்தது. கூடவே கோபத்தில் முகம்தூக்கி வைத்திருக்கும் மனைவியை சமாதானம்

செய்யும் பணியும்.

அம்மா இருந்தவரை அவள்தான் அப்பாவை கவனித்துக்கொள்வாள். "நா ஹெல்ப் பண்றனேம்மா" என்றால்.... " நா இருக்கவரை செய்துடறேண்டா.. விட்ரு" என ஒரே பிடிவாதமாக மறுத்துவிட்டாள். கைத்தாங்கலாக கொல்லைக்கு தூக்கிச்சென்று நாற்காலியிலமர்த்தி, பதமான வெந்நீரில் குளிக்கச்செய்வாள். புத்தகங்கள் ஏதேனும் வாசித்துக்காட்டுவாள். கைகால்களை மெல்ல அழுத்திவிட்டு, அசைத்து பயிற்சியளிப்பாள். அவள் இருந்தவரை அப்பா ஜம்மென்று அத்தனை வாசனையாக இருப்பார்.

துணியை உலர்த்துவதற்காக மொட்டைமாடிக்கு செல்ல, மகன் அரைநிஜாருடன் கவிழ்ந்துறங்கிக்கொண்டிருந்தான். இரவெல்லாம் எங்கோ சுற்றிவிட்டு நண்பர்களுடன் அரட்டையடித்துவிட்டு எப்போதென்று தெரியாமல் பைசாசம்போல நள்ளிரவில் வந்து படுத்துக்கொள்கிறான். முதல்நாள் உலர்த்தப்பட்ட துண்டு ஒன்று பறந்து கைப்பிடிச்சுவரில் விழுந்திருந்தது. அதை எடுக்கையில் சன்ஷெட்டில் ஒரு சிகரெட் துண்டு கிடந்தது. தன் பிள்ளைக்கு இந்தப்பழக்கமெல்லாம் எப்போது வந்ததென்று தெரியவில்லையே என அவருக்கு கவலையாக இருந்தது. அவனை கவனிக்கவே தனக்கு நேரமில்லாதுபோயிற்று. தனது ஒவ்வொருநாளின் பெரும்பகுதியையும் அப்பாதான் ஆக்கிரமித்திருந்தார்.

இது சரியில்லை. இன்று அவனுடன் கொஞ்சமேனும் நேரமொதுக்கி பேசவேண்டும் என நினைத்தபடி கீழிறங்கி சமையலறைக்குள் நுழைந்தார்.

"ஒரு வாய் காபி குடும்மா"

"காபிப்பொடி தீர்ந்துருச்சி. டீ வேனும்னா போட்டுத்தரலாம்" என்றாள் இவர் முகத்தையே பார்க்காமல். சதாசிவத்திற்கு சுர்ரென்று கோபமேறியது. இது ஒரு ஆயுதம். நேற்று என்னைக் காயப்படுத்தினாயல்லவா ? பொறு பேசிக்கொள்கிறேன். என்பதுபோன்ற மென்யுத்தம். இப்பொழுது தான் ஆத்திரமடைந்து வார்த்தைகளை இறைத்தால், அவற்றிலிருந்து இன்றைக்கான சண்டையை தொடங்கிவிடலாம் என்பதான மனநிலை. இவர் சிரித்தபடியே.. "சரி டீயே போட்டுக்குடும்மா" என்றார்.

மனைவி லைட்டரில் நான்கைந்துமுறை நிமிண்டியும் அடுப்பு பற்றிக்கொள்ளவில்லை. அது அவளை இன்னும் கோபமூட்டியது.

"ச்சே... சனியம்புடிச்ச லைட்டர்.. சமயத்துக்கு உசுரவாங்குது. இந்தவீட்ல ஒரு உருப்படியான லைட்டர்கூட கெடையாது" என்று புலம்பியபடி லைட்டரை பட்டென்று விட்டெறிய அது பாத்திரம் கழுவும் சிங்க் அருகில் சென்று விழுந்தது.

இது அடுத்த ஆயுதம். இந்தவீட்டில் தான் மகிழ்வாக இல்லை, தனக்கான எதுவும் சரிவர கிடைக்கவில்லை என்பதை வலியுறுத்தும் முயற்சி. சதாசிவம் பொறுமையுடன் லைட்டரை எடுத்து அடுப்பை பற்றவைத்து பாலை கொதிக்கவிட்டுவிட்டு மனைவியின் தோள்பற்றினார். அவள் கையை தட்டிவிட வேறுவழியின்றி நகர்ந்து அப்பாவின் அறைக்குள் நுழைந்தார். அறை கடுமையான வாடையில் நிரம்பியிருந்தது. அப்பாதான் மலம் கழித்திருக்கவேண்டும். கோனிய அவர் உதடுகள் ஏதோ பேசவிரும்புவதைப்போல நடுங்கிக்கொண்டிருந்தன.

"ழ்ழ்ழா பாப்ப்ப்ஜ்ஜ்ழ்ச்" என்று குழறினார்.

"பரவால்லப்பா.. மாத்திடறேன் இருங்க" என்றபடி அப்பாவினருகில் சென்று கட்டப்பட்டிருந்த மலமுறிஞ்சித்துணியை கழற்றிவிட்டு, ஒரு துணியை ஈரமாக்கிவந்து அப்பவை புரட்டி சுத்தமாக துடைத்துவிட்டார். புதிதாக வேறொன்றினை கட்டிவிட்டபோது அப்பாவின் சுவாசச்சூடு இவர் முகத்தில் பட்டு ஒருமாதிரி சூடமிட்டாய் வாசனை வந்தது.

அப்பாவின் கண்களில் இன்னும் நிறைய உயிர் மிச்சமிருந்தது. விழிப்படலம் இன்னும் பழுப்பாகாமல் பால்வெண்மையில் இருந்தன. சதாசிவத்திற்கு புத்தகங்கள் வாசிக்கும் பழக்கம் அப்பாவிடமிருந்துதான் வந்தது. அப்பா நிறைய புத்தகங்கள் வாசிப்பவர். தேவன் புத்தகங்கள் என்றால் அவருக்கு அத்தனை பிரியம். கல்கி, ஜராசுந்தராஜன், ஜாவர் சீத்தாராமன், சாண்டில்யன் என ஒருவரை விட்டதில்லை. வாசிப்பில் அப்படியொரு காதல் அவருக்கு.

வாசிப்பது மட்டுமின்றி தவறாமல் அவற்றில் தான் ரசித்தவற்றைப்பற்றி எழுத்தாளர்களுக்கு விளக்கமாக கடிதங்களும் எழுதியனுப்புவார். சிலரிடமிருந்து பதில்கடிதங்கள்கூடவந்திருக்கின்றன. அப்பா ஒரு ஃப்ரூப் ரீடர். அவர் அடிக்கடிக்கூறுவார். "பெரிய எழுத்தாளனா இருப்பான். ஒழுங்கா ஒற்றுப்பிழையில்லாம எழுதத்தெரியாது பலபேருக்கு. எடிட்டரும் ஃப்ரூப் ரீடரும் இல்லன்னா இங்க முக்காவாசி ரைட்டருங்க பொலப்பு ஓடாது தம்பி" என்பார். ஆனால் அம்மா லக்ஷ்மியின் வாசகி. அடிக்கடி அப்பாவும் அம்மாவும் தாங்கள் வாசித்த புத்தகங்கள் குறித்து விவாதிப்பார்கள்.

விபரம் வந்தபின்பு ஒருநாள் இவர் அப்பாவிடம் கேட்டார்.

"ஏதாவது எழுதலாமேப்பா"

அவர் சிரித்தார். பின்பு மரப்பெட்டியை திறந்து ஒரு கடிதத்தை எடுத்து இவர்பக்கம் நீட்டி வாசிக்கச்சொன்னார். அதுவும் ஒரு எழுத்தாளரிடமிருந்து வந்ததுதான். 'தொடர்ந்து தாங்கள் எழுதும் கடிதங்களுக்கு நன்றி. உங்கள் கடிதங்களின் சரளமான மொழிநடை அருமையாக உள்ளது. சற்றே முயற்சித்தால் தங்களால் மிகநல்ல படைப்புகளை வெளிப்படுத்த இயலும்' என்பதுதான் அக்கடிதத்தின் சாரம். கடிதத்தை மறுபடி பெட்டியிலிட்டுவிட்டு கூறினார்.

"அது ஒரு பெரிய சிரமம் தம்பி. எதாவது கொஞ்சம் எழுதினதும் கெடைக்கிற பாராட்டுல மனசு மயங்கிப்போயிடும். அப்பறம் எழுத்துமேல நாட்டம் போயி பாராட்டுக்காக எழுத ஆரம்பிச்சிரும். என்னைக்கேட்டா எழுதறதைவிட வாசிக்கிறதுதான் பேரின்பம். ரெண்டையுமே செய்யிறவங்களும் உண்டு. எனக்கு வாசிப்பு மட்டும் போதும்னு தோனிருச்சிப்பா"

அப்பாவை எழுப்பி கட்டிலிலேயே சுவரோரம் சாய்த்து உட்காரவைத்து நிமிர்ந்தபோது மனைவி வந்து "டீ ஆறுது" என்றாள்.

அவளை நினைத்தாலும் பாவமாகத்தான் இருந்தது சதாசிவத்திற்கு. பாவம் அவளுக்கும் வயதாகிக்கொண்டிருக்கிறதே. என்னவோ இப்பொழுதெல்லாம் அவள் அருகில் நெருங்கினாலே அப்பா பைத்தியம்போல அடித்தொண்டையில் கர்ணகடூரமாக ஒலியெழுப்பி அவளை விரட்டிவிடுகிறார். கூச்சம் காரணமா இல்லை வேறெதுவுமா என்று புரிந்துகொள்ளமுடியவில்லை.

அவளையும் என்ன சொல்ல.. இக்காலத்தில் எந்த மருமகள்தான் மாமனாருக்கு பணிவிடைகள் செய்ய முன்வருவாள். அவளும் நிறைய செய்து சலித்துவிட்டாள். போதாக்குறைக்கு ஒரு நல்லது பொல்லாதவற்றிற்கு வெளியில் செல்லமுடிவதில்லை. ஒரு காவலாளிபோல எப்போதும் யாரேனும் ஒருவர் வீட்டிலேயே இருக்கவேண்டிய சூழல். மகனோ அப்பாவின் வாடைதாங்காமல் வீட்டினுள் இருப்பதையே கூடுமானவரை தவிர்க்கிறான்.

நேற்றைய சண்டைக்குக் காரணமும்கூட வழக்கம்போல அப்பாவிஷயம்தான். அருகாமையில் எங்கோ புதியதாக ஒரு ஹோம் தொடங்கியிருப்பதாகவும், மருத்துவ வசதிமுதல் சகல வசதிகளும்

இருப்பதாகவும், ஆரம்பித்தபோதே இவருக்கு உள்ளுக்குள் பொசுக்கென்று கோபம் பற்றிக்கொண்டு வந்தது.

"சும்மா கோவப்படாதீங்க. இதுக்குமேலயும் என்னாலல்லாம் வச்சி சிஷ்ருஷை பண்ணிட்ருக்கமுடியாது. நானும் மனுஷிதானே. எங்கப்பாவா இருந்தாலும் இதைத்தான் சொல்லிருப்பேன். நா என்ன உங்க பிரண்டு ரகு செஞ்சமாதிரியா செய்யச்சொன்னேன்" ? என்றாள். வெகுகாலத்திற்குப்பிறகு அவர் மனைவியை அடிக்க கையோங்கியது நேற்றுத்தான். வெகுநேரம் அழுதுபுலம்பியபடியே உறங்கிப்போனாள்.

சதாசிவத்தின் நண்பர் ரகு அப்படித்தான் செய்தார். அதற்குபின்தான் அவருடனான நட்பை முறித்துக்கொண்டது. ரகுவின் அப்பா பார்ப்பதற்கு அப்படியே ரமணமகரிஷி போலிருப்பார். அவருக்கு பக்கவாதமெல்லாம் இல்லை. இயல்பான மூப்பின் தளர்வும் தள்ளாமையும்தான். கணவன் மனைவி இருவருமே வங்கி ஊழியர்கள். கொஞ்சகாலம் ஹோமில் எல்லாம் சேர்த்துப்பார்த்து சரிவராமல் வீட்டிக்கு அழைத்துவந்தார்கள். பிறகு திடீரென்று ஒருநாள் அவர் இறந்துபோனதாக போன் செய்தார். அப்பொழுது அம்மா உயிருடன்தான் இருந்தாள். அம்மாவும் இவரும்தான் சென்று பார்த்துவிட்டு வந்தார்கள். இவர்கள் சென்றபோது அவர் ரமணமகரிஷி போலவெல்லாம் இல்லாததில் இவருக்கு வருத்தம்தான்.

கொஞ்சகாலம் கழித்து ஒருநாள் தனிமையில் சதாசிவத்திடம் குடித்துவிட்டு வந்து ரகு குற்றவுணர்வில் அழுதபோதுதான் விஷயம் புரிந்து திக்கென்றிருந்தது. வெகுநேரமாயிற்று அந்த அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்கு. என்னென்னமோ கருணை கஷ்டப்படுவதை சகித்துக்கொள்ள இயலவில்லையென நியாய தர்க்கங்களை ரகு தன் தரப்பாக முன்வைத்தபோதும் சதாசிவத்தால் அவர் செயலை ஏற்றுக்கொள்ளவே முடியவில்லை. ஒரேயடியாக அவரிடமிருந்து விலகிக்கொண்டார்.

தன் மனைவியிடம் முற்றுப்புள்ளி வைப்பதுபோல உறுதியாகக்கூறிவிட்டார்.

"இப்டிலாம் பேசாத ரேவதி. நாளைக்கு ஒருவேளை எனக்கு இந்த நெலமை வந்தாலும் இதைத்தான் செய்வியா? நல்லாத்தெரிஞ்சுக்க... அப்பா இங்கதான் இருப்பாரு. என் ஒடம்புல தெம்பிருக்கிறவரை நா பார்த்துக்குறேன். அப்பறம் விதிவிட்டவழி".

அப்பாவை கைத்தாங்கலாக கொல்லைக்கு அழைத்துச்சென்றபோது

சதாசிவத்திற்கு மூச்சிரைத்தது. இடுப்பிலொரு துண்டைக் கட்டிவிட்டு குளிக்கவைத்தார். துவட்டிவிட்டு இளம் வெயிலில் உட்காரவைத்தார். பளீரென்ற வெள்ளை வேட்டியில் நெற்றிவிபூதியுடன் உட்கார்ந்திருந்த அப்பா இப்பொழுது அள்ளிக்கொஞ்சலாம்போல அத்தனை அழகாக இருந்தார் !

வாசல் வேம்பிலிருந்து சில காகங்கள் கரைந்தன. சரியாக இருந்த ஒரு கையினால் அப்பா செம்பருத்திப்பூவை காண்பித்து குழறலாக என்னவோ கூறினார். பெரிதாக வீசிய காற்றில் செடியியிலிருந்து பழுத்த பூவொன்று ஈரத்தரையில் உதிர்ந்தது.

பிறகு... மறபடியும் குழறலாக "எழ்ழா ஊ தழயெழுழ்ஷா" என்றார்.

"தலையெழுத்தெல்லாம் ஒண்ணுமில்லப்பா.. நா சின்னப்புள்ளையா இருந்தப்ப நீங்க என்னை குளிக்கவைக்கலியா.. அதுமாறிதான் இது. எல்லாம் சரியாப்போயிரும்பா விடுங்க"

# 14. டியூலிப்..

வழமையாகச் செல்லும் பூங்காவின் நடைபாதையில் மாலை நடைபயிற்சியின்போதுதான் நான் அவனைச் சந்தித்தேன். துவாலையும் மாத்திரைகளும் குடிநீர் போத்தலும் நிரம்பிய என் பையை வைத்திருந்த, சாய்மானமுடன்கூடிய நீள் இருக்கையில்தான் அவன் அமர்ந்திருந்தான். சுழல்வட்டமாக பூங்காவைச் சுற்றிவருகையில் அவனைக் கடக்கையில் அவனாகத்தான் என்னை அழைத்தான். நான் காத்திருக்கும்படி அவனுக்கு ஜாடை காண்பித்துவிட்டு, எனது இறுதிச்சுற்றை முடித்துக்கொண்டு அவனருகில் சென்று அமரும்வரை பொறுமையுடன் புன்னகைவழிய, காத்திருந்ததான்.

அவ்வளவாக மீசைகூட முளைவிடாத இளைஞன் அவன். அவனது உயரமோ, கட்டும்ஸ்தான உடற்கட்டோ அவனை சிறுவனென்று அழைப்பதை தடை செய்தது. இதற்குமுன்பாக அவனை இப்பிராந்தியத்தில் பார்த்ததாக எனக்கு நினைவில்லை. துவாலையால் எனது முகத்தின் வியர்வையை ஒத்தியெடுத்துவிட்டு, கொஞ்சம் போல நீரருந்திவிட்டு அவன்பால் என் பார்வையை வீசினேன். என்ன என்பதுபோல.

அவன் தன்னை 'டியூலிப்' என்று அறிமுகப்படுத்திக்கொண்டான். நான் என் பெயரை. குலுக்கிய அவனது கை மிக மென்மையாகவும் குளிர்ச்சியாகவும் இருந்தது. தானொரு மானுடவியல் ஆராய்ச்சியாளன் என அவன் கூறியபோது முதலில் என்னால் நம்பவேமுடியவில்லை. காரணம் முன்பே நான் கூறியதுதான். ஒரு வளர்ந்த சிறுவனைப்போல அவன் அத்தனை இளமையாக இருந்தான். தனது ஆய்வின் ஒரு பகுதியாகத்தான் இந்நகரத்திற்கு வந்திருப்பதாகவும் கூறினான்.

ஒரு ஓய்வு பெற்ற நூலகனான எனக்கு மனிதர்கள் புதிதல்ல. விதவிதமான மனிதர்களின் சந்திப்புகளால் அவர்களது உடல்மொழியை வைத்தே அவர்களைப்பற்றி கணித்துவிடும்படியான சாமர்த்தியங்கள் பெற்றிருந்தேன். ஆனால் அவனிடம் எனது சாமர்த்தியங்கள் எதுவும் பலிக்கவில்லை. எதிரிலிருந்த குரோட்டன்ஸ் செடிக்குமேலாகப் பறக்கும் வண்ணத்துப்பூச்சியை அவன் விழிவிரியப் பார்த்துக்கொண்டிருந்தான். அதிக அசைவுகளின்றி ஒரு ரோபோவை ஒத்திருந்தது அவன்

உடல்மொழி. அவனது இமைகள் சிமிட்டிக்கொள்வதேயில்லை என்பதை தாமதமாகத்தான் உணரத்தொடங்கினேன்.

"தப்பா நெனைக்கவேண்டாம்... இது என்ன வருடம், எந்த இடம்னு சொல்லமுடியுமா?" எனக் கேட்டவனை விசித்திரமாக பார்த்தேன். ஒரு மனம் பிறழ்ந்தவனுக்கான அறிகுறிகளேதும் அவனிடத்தில் தென்படவில்லை.

" என்ன கேக்கிற தம்பி ? இது என்ன வருசம்னு உனக்குத்தெரியாதா?"

புன்னகைத்தபொழுது அவன் மூக்கு சற்று விடைத்துக்கொண்டது.

"இல்ல... தெரியாது.. நா வேற இடத்திலருந்து வரேன்.. ப்ளீஸ் பதில் சொல்லுங்க"

"வேற இடம்னா?"

அவன் தயங்கினான். பிறகு,

" இதைச்சொன்னா நீங்க நம்பமாட்டீங்க"...

"இல்ல நீ சொல்லு... நம்புறதுபத்தி அப்பறம் யோசிப்போம்"

அவன் உற்சாகமாக தன்னைப்பற்றி விரிவாகக் கூறினான். ஒரு தட்டச்சு எந்திரத்தின் வேகத்தில் படபடவென அவன் கூறியதின் சாராம்சம் இதுதான். பூமியின் பல்லாயிரம் ஒளியாண்டுகள் தொலைவிலிருக்கும் நிண்டூரா கிரகத்தை சேர்ந்தவன். தனது கல்வியின் இறுதியாண்டு செயற்பாடத்தின் ஒரு பகுதியாக அவன் இங்கே வந்திருக்கிறான்.

எனக்கு நிறைய சந்தேகங்களும் குழப்பங்களும் இருப்பினும் அவன் கூறியதை ஏனோ நம்பத்தோன்றியது.

"ஒளியாண்டுகள் கடந்து பயணம் பண்ற அளவுக்கு வளர்ந்த கிரகமா உங்க நிண்டூரா?"

" ஆமாம் ஏன்?" என்றான் அவன் நெளிந்தபடி.

நான் கொஞ்சம் கேலியுடன் கேட்டேன்.

"கொஞ்சம் லாஜிக்கா யோசி. இத்தனை அட்வான்ஸ் டெக்னாலஜி வச்சிக்கிட்டு, இது என்ன இடம் வருஷம்னே தெரியாமத்தான் இங்க வந்தன்றதை யாராவது நம்புவாங்களா?"

அவன் சிரித்தான்,

" இதை விளக்குறது கொஞ்சம் சிரமம். எங்ககிட்ட பலதரப்பட்ட டைம் மெஷின்ஸ் இருக்கு. எனக்கு தரப்பட்டது ரொம்ப பழமையான மிஷின். அதில வருஷங்களை குறிப்பிட்டு பயணம் பண்றதுக்கான வசதிகள் இல்ல. அது காலங்கள்ல தன்னிச்சையா பயணிக்கக்கூடியது. அதனாலதான் எனக்கு இது என்ன இடம் வருஷம் எதுவும் பிடிபடலை"

அவன் பேச்சு எனக்கு அதிர்ச்சி ஆச்சரியம் என விவரிக்க இயலாத கலவையான உணர்வைக் கொடுத்தது.

"ஆனா இது ஆபத்தில்லயா தம்பி? ஒருவேளை யுத்தம் நடக்கிற ஏதாவது ஒரு இடத்தில இறங்கிருந்தா அது உன் உயிருக்கே ஆபத்தில்லயா?"

அவன் அதற்கும் உடல்நெளியச் சிரித்தான்.

" அதை ஏன் கேக்குறீங்க. நேத்து அப்டித்தான் ஆகிடுச்சி. அந்த இடமே ரொம்ப பயங்கரமா இருந்திச்சு. அங்கங்க ஜனங்க நெறைய செத்துக்கிடந்தாங்க... தேடித்தேடி கொன்னுக்கிட்ருந்தாங்க... அங்கே ஒரு இடத்தில மாட்டிக்கிட்டேன்.. பல பேரு என்னைக் கொல்லவந்தாங்க.. அங்கயிருந்து தப்பிச்சு வந்ததே பெரிய கஷ்டமாகிடுச்சி" என்றவனின் குரலில் வருத்தமும் படபடப்புமிருந்தது.

எனக்கு அவனைப் பார்க்க பாவமாக இருந்தது.

"சரி அப்பறம் எப்டி அங்கயிருந்து தப்பிச்ச?"

அவன் தனது இடுப்புப்பகுதியிலிருந்து அதை எடுத்தான். நிறைய பட்டன்களுடன் சிறிய ரிமோட்டின் வடிவிலிருந்தது அது.

" இதுதான் என் டைம் மெஷினோட கண்ட்ரோலர். இதுல ஒரு இடத்திலருந்து உடனே கிளம்புறதுக்கு இந்த பட்டனை அழுத்தினா, அது தன்னிச்சையா எங்கியாவது கூட்டிட்டு போயிடும். எல்லாத்தையும் விட பெரிசா இருக்கிற இந்த பட்டனை அழுத்தினா மொத்த பயணமும் கேன்சலாகி நா நிண்டூராவுக்கே திரும்பிடுவேன். வந்த வேலை முடிஞ்சாலோ, இல்ல பெரிய பிரச்சனையாகி. வேற வழியே இல்லாட்டியோதான் இதை அழுத்தவேண்டியிருக்கும்"

எனக்கு ஆர்வம் கூடியது. அதைக் கையில் வாங்கிப்பார்க்கும் ஆசையை கட்டுப்படுத்திக்கொண்டேன். எனக்கு இதெல்லாம் ஒருவேளை கனவோ என்கிற சந்தேகம் ஒருபக்கம் உறுத்தியது. அவனுக்கு நடப்பு

ஆண்டைப்பற்றியும் நகரத்தின் பெயர்பற்றியும் விபரமாகக்கூறினேன். இதுபோன்ற நிகழ்வுகளை அறிவியல் புனைவுக் கதைகளில்தான் படித்திருக்கிறேன். அவன் நான் கூறியதையெல்லாம் எதிலும் குறித்துவைத்துக்கொள்ளவில்லை.
நான் அவனிடம் கேட்டேன்.

"ஆனா உனக்கு என் மொழி எப்படி தெரிஞ்சது?"

அவன் தனது வழக்கமான புன்னகையுடன் பதிலளித்தான்.

" இந்த பிரபஞ்சத்தில இருக்கிற எல்லா உயிர்களோட தொடர்புமொழிகள், சங்கேத மொழிகளும் எங்க ஜீன்கள்ல எழுதப்பட்டிருக்குங்க" என்றான் வெகு சாதாரணமாக.

"உனக்கு எத்தனை வயதிருக்கும் தம்பி" என்றேன் அவனிடம்,

"நான்காயிரத்து முன்னூறு" என்ற அவன் பதிலில் அதிர்ந்துபோனேன்.

"என்னப்பா சொல்ற?" என்றேன்,

அவன் இது ஒன்றும் பெரிய விஷயமேயில்லை என்பதுபோல பூங்காவிற்கு வெளியில் சென்ற குப்பை லாரி ஒன்றை கவனித்துக்கொண்டிருந்தான்.

" நீ இப்ப எதைப்பத்தி ஆராய்ச்சி பண்ணிட்ருக்க?"

"உயிர்களின் இருத்தல் பற்றிங்க" என்றான்..

"உயிர்களின் இருத்தலா ? அப்டீன்னா?"

" அது என்னன்னா... இப்ப நீங்களும் நானும் இருக்கோமில்லயா ? நாம இருக்கிறதுக்கு ஒரு ஊடகம் தேவைப்படுது. அதாவது இந்த உடல். எனக்கு என் உடல். உங்களுக்கு உங்க உடல். அதோ அந்த கம்பளிப்பூச்சிக்கு அதோட உடல்"...

"ம் புரியுது... எல்லா உயிருக்கும் அததுக்குத் தகுந்தாப்ல ஒரு உடலமைப்பு இருக்கு. அதுல என்ன?"

" ஆங்.. ரொம்ப சரியாச் சொன்னீங்க.. மரம் செடி கொடிகளுக்கும்கூட அப்டித்தான்.. அதுங்களோட பிரசன்ஸுக்கு ஒரு அமைப்போ ஊடகமோ தேவைப்படுது. ஆக அந்த ஊடகத்திலயிருந்து நம்ம பிரசன்ஸை மட்டும் தனியா பிரிச்சிட்டா என்னாகும்?"

எனக்கு அவன் கூற வந்தது புரிந்தது.

"சிம்பிள்... இந்த உடம்பிலருந்து நம்மை பிரிச்சிட்டா நாம செத்திடுவோம்"

அவன் சிரித்தான்..

"ம் அப்டியும் சொல்லலாம்.. ஆனா யதார்த்தம் என்னன்னா, மரணம்ங்கிறதே, நம்ம பிரசன்ஸை மறந்துபோயிடறதுதான்"

" நீ என்ன சொல்ற... கொழப்பாம நேராச் சொல்லு"

அவன் சற்று நிமிர்ந்துகொண்டான்.

"அதாவது நாம அப்டீன்னு எதை நாம உணருறோமோ.. அந்த ஞாபகத்தை நாம மறந்துடறதுதான் மரணம். ஏன் நாம மறந்திடறோம்னா, அதுக்கு நம்ம உடல்ங்கிற ஊடகம்தான் காரணம். இப்ப அந்த ஊடகம் இல்லாமலும் நம்மால நம்ம தன்னுணர்வை உணரமுடிஞ்சா எப்டியிருக்கும்.. அதான் என்னோட பிராஜக்ட்"

நான் மிரண்டுகிடந்தேன்.. கிட்டத்தட்ட அவன் கூறியது பழங்கால சித்தர்கள்கூறிய மெய்ஞானத்திற்கு ஒப்பான சமாச்சாரம்.

" சரி அதுக்கு எதுக்காக பூமிக்கு வந்த?"

"ஹ்ஹ்ஹா நல்ல கேள்வி.. என்னோட இந்த பிராஜக்டை பரிசோதிக்க நிண்டூரா அரசாங்கம் ஒத்துக்கலை. வேணும்னா வேற கிரகங்கள் எங்கிருந்தாவது குரங்குகளை கொண்டுவந்து பரிசோதிச்சுக்கும்படி சொன்னதால, இங்க வந்தேன்".

"சரி உன் அப்பாம்மா எல்லாம் என்ன செய்யிறாங்க?" என்றேன்.

" அப்பாம்மா ?.... அப்டீன்னா?"

"அப்பா அம்மாப்பா... உன்னை பெத்திருப்பாங்களே.. அவங்களை கேக்கிறேன்"

"இல்ல... நீங்க கேக்கிறது எனக்கு புரியல. என்னைப் படைச்சது நிண்டூராவோட கிரியேட்டிங் எந்திரம். எங்க கிரகத்தோட மக்கள் எல்லாத்தையும் படைக்கிறதே அந்த எந்திரம்தான்"

எனக்கு மிகுந்த குழப்பமேற்பட்டது.

"அப்டீன்னா உங்க கிரகத்தில ஆண் பெண் திருமணம் இதெல்லாம் இல்லியா?"

" திருமணமா ? மன்னிச்சுக்கங்க... எனக்கு நீங்க சொல்றது புதுசா இருக்கு. அப்டீன்னா என்னன்னு விளக்குவீங்களா?"

நான் மிகவும் பொறுமையுடன் அவனுக்கு இனவிருத்தி பற்றிய பரிணாம வளர்ச்சி பற்றிய சிறிய விளக்கத்தை அளித்தேன்.

"ஆனா இனவிருத்திக்கு எதுக்காக ஒரு ஆணும் பெண்ணும் இணையனும் ? எங்க கிரகத்தில அப்டீலாம் வழக்கமில்ல. எங்களுக்கு குழந்தைகள் தேவைப்பட்டா அரசாங்கத்துக்கு மனு போடுவோம். அரசு அனுமதிச்சா, அடுத்த அஞ்சு நிமிஷத்தில, முன்னமே அவங்ககிட்ட இருக்கிற எங்க உயிரணுக்கள் மூலமா கிரியேட்டிவ் எந்திரம் குழந்தைகளை உருவாக்கிக்குடுக்கும்"

எனக்கு அவன் கூறியதில் பாதி புரிந்தது பாதி புரியாமலிருந்தது.

"அப்ப ஆணும் பெண்ணும் ஒண்ணா வாழமாட்டாங்களா உங்க ஊர்ல?"

அவன் நகைச்சுவையைக் கேட்டதுபோல குலுங்கிக்குலுங்கிச் சிரித்தான்.

" நிண்டூராவில் ஆண் பெண் அப்டீன்னு தனியா எல்லாம் யாரும் இல்லங்க. ஒரே இனம் தான்... மனித இனம். தேவைக்கேற்ப நாங்க ஆணாவும் பெண்ணாவும் பாலினத்தை மாத்திப்போம்" என்றாள்.

நான் அப்பொழுது தான் அவனை சந்தேகத்துடன் பார்த்தேன். சற்றே பெண்மையின் சாயல் கலந்திருந்தன அவனது மெலிதான அசைவுகளில்.

"நா ஒண்ணு கேட்கிறேன்.. தப்பா நெனைச்சிக்காத. நீ .... நீ ஒரு ஆணா பெண்ணா?"

அவன் முகம் சுருங்கியது.

" அதான் சொன்னனேங்க. நா ஒரு மனுஷன். உங்களுக்கு என்னை ஒரு பெண்ணா பார்க்க தான் விருப்பம்னா நா பெண்ணா மாறிக்கிறேன்" என்றபடி, தனது இடுப்புப்பகுதியில் கை நுழைத்து என்னவோ செய்தான். சட்டென்று அச்சு அசலாக ஒரு இளம்பெண்ணாக மாறிவிட்டிருந்தாள்.

கிராப்புடன் கூடிய அவனது தலைமயிர்கள் இப்பொழுது சற்றே நீண்டு

கழுத்துவரை தொங்கிக்கொண்டிருந்தது. நான் இதன் பவுதீக விதிகளைப்பற்றி, இது எவ்விதம் சாத்தியம் என்பதுபற்றி யோசித்துக்கொண்டிருந்தேன். கூடுமானவரை அங்கிருந்து கிளம்புவதே நல்லதென எச்சரித்தது எனக்குள் ஏதோ ஒன்று.

"சரிப்பா... இல்லயில்ல... சாரிம்மா... நா கௌம்புறேன் எனக்கு டைமாச்சு" என்றபடி பதற்றத்துடன் எழுந்துகொண்டேன். அவளும் எழுந்துகொண்டு என்னுடன் கை குலுக்கினாள்.

"உங்களை சந்திச்சதில ரொம்ப மகிழ்ச்சி" என்றாள்.

அவளது பல்வரிசை அத்தனை அழகாக இருந்தது. ஒரு சாயலில் பார்ப்பதற்கு என் அண்ணனின் பேத்தி போலிருந்தாள். நான் பிரமையுடன் அவளிடமிருந்து விலகி நடக்கத்துவங்கினேன். அவளும் என்னைப் பின் தொடர்வதாக என் உள்ளுணர்வு உணர்த்த, திரும்பிப்பார்த்தேன். இரண்டடி இடைவெளியில் அவள் வந்துகொண்டிருந்தாள்.

"நீ... நீ எதுக்கும்மா என்னோடவே வர ? நா வீட்டுக்குப்போறென்" என்றேன். என் குரலில் சற்று நடக்கமிருந்ததாக உணர்ந்தேன்.

அவள் தயக்கத்துடன் கூறினாள்.

"எங்கள் ஊரில் ஒரு வழக்கமுண்டு. புதுசா யாரையேனும் சந்திச்சா நினைவுப்பரிசுகள் பரிமாறிக்கிறது எங்க வழக்கம்"...

என்றபடி, தனது கழுத்தில் அணிந்திருந்த சங்கிலியை கழற்றி என்னிடம் நீட்டினாள். ஒளிரும் சிறுசிறு கற்கள் பதிக்கப்பட்ட அச்சங்கிலியின் டாலர் காற்றில் ஊசலாடியது. நான் தயக்கத்துடன் அசைவற்று நிற்கவும், அவளாகவே உரிமையுடன் எனது கையை எடுத்து அதில் சங்கிலியைத் திணித்துவிட்டுப் புன்னகைத்தாள்.

எனக்கு அவளுக்கு என்ன தருவதென்று தெரியவில்லை. நடைப்பயிற்சிக்கு என்பதால் கைவசம் எதுவும் கொண்டுவந்திருக்கவில்லை. அவள் புரிந்துகொண்டவளாக,

" பரவால்லங்க.. மறுபடியும் எப்பவாச்சும் சந்திக்கிறப்ப உங்க பரிசை வாங்கிக்கிறேன்" என்றாள். நான் ஒருமாதிரி அசடு வழிய திரும்பி நடந்தவன் சில அடிகளிலேயே மயங்கினேன்.

மறுபடி கண்விழித்தபோது.. " வெல் கம் டூ நிண்டூரா" என்றபடி...

நின்றிருந்தான்... நின்றிருந்தாள்... நின்றிருந்தது...

*

கீற்று இணைய இதழில் வெளிவந்தது

# 15. எறும்புகள்

அவர் வந்திருந்தார். ஆச்சரியத்துடன் அவரை வரவேற்று சோபாவில் அமரச்சொன்னேன். மறுத்துவிட்டு தரையில் அமர்ந்துகொண்டார்.

"காபி சாப்பிடறீங்களா?" என்றேன்.

" பிளாக் டீ போதும்" என்றார்.

தேநீர் தயாரித்தபடி ஹாலிலிருந்த அவரை கவனித்தேன். சுவரோரம் ஊர்ந்துகொண்டிருந்த எறும்புகளையே பெரிய அதிசயம்போல ரசித்துக்கொண்டிருந்தார். தேநீரை ஒருவாய் உறிஞ்சிவிட்டு மிகவும் நன்றாயிருப்பதாக பாராட்டினார்.

எறும்புகளில் சில சுவரிலேறி சாளரம் நோக்கி நகரத்தொடங்கியிருந்தன. பிள்ளையை அழைத்துவர பள்ளிக்குச்சென்ற மனைவியின் தாமதம் பற்றி என் மனதில் சிந்தனை வந்துபோனது.

"நீ ரொம்ப குடுத்துவச்சவன்... உன் வீட்டுல இதுங்க எத்தனை சுதந்திரமா சுத்திட்டிருக்குங்க" என்றார், ஊர்ந்துகொண்டிருந்த எறும்புகளை காண்பித்து.

எனக்கு அவர் பேசியது அவ்வளவாக புரியவில்லை. அவர் எழுத்துக்களைப் போலவே.

"எறும்புல என்னங்க இருக்கு?" என்றேன் அசட்டையாக.

அவர் எனக்கு பதிலளிக்காமல் காற்றிலாடும் சாளரத்தின் திரைச்சீலையை கவனித்துக்கொண்டிருந்தார். பொம்மைகளை பகிர்ந்துகொள்ள விரும்பாத குழந்தைகளை ஒத்திருந்தது அவரது அருகாமை. வார்த்தைகளை வலியத்தான் பிடுங்கவேண்டியிருந்தது அவரிடமிருந்து.

" எழுதறியாமே" என்றார்.

அவர் குரலில் கேலியிருந்ததோ என்று சந்தேகித்தேன்.

"இல்லங்க... சும்மா அப்டியே".... என இழுத்தேன். என் குரலில் எனக்கே

தெளிவில்லை.

" எழுதலாம்.. தப்பில்ல"... என்றபடி,

கோப்பையின் இறுதித்துளிகளில் ஒன்றிரண்டை சுவரோரம் கவிழ்த்தார். சற்றைக்கெல்லாம் சில எறும்புகள் அதைநோக்கி நகரத்துவங்கின.

"சார்த்தர் வாசிச்சிருக்கியா ? ரஸ்ஸல்... டால்ஸ்டாய் ஹெமிங்வே?"

" இல்லங்க.. அவ்வளவா வாசிக்கலங்க... ... இன்னும் தமிழையே தாண்டல" என்றபோது சற்று அவமானமாக உணர்ந்தேன்.

"என்ன எழவைத்தான் வாசிச்சிருக்க?" என்றார் கடுமையாக.

கொஞ்சம்போல வாசித்தவை பற்றி அவருடன் பகிர்ந்துகொண்டேன். துளியும் சலனமற்ற முகத்துடன் மறுபடி எறும்புகளை கவனிக்கத்துவங்கிவிட்டார். அவராக தொடங்கட்டுமென நான் காத்திருந்தேன்.

"விடு... அதுனால என்ன ? எத்தனை வாசிச்சாலும் எழுதப்போறது என்னவோ..." என பாதியில் நிறுத்தினார்.

"புரியலங்க" என்றேன்.

இப்பொழுது அவர் ஒரு குழந்தைபோல புன்னகைத்தார்.

"ஒவ்வருத்தரும் ஒரே விஷயத்தைத்தான் திரும்பத்திரும்ப எழுதறாங்க. வேற வேற தளங்கள் கட்டுமானங்கள் எல்லாம் இருந்தாலும்கூட... சொல்றதுக்கான ஆழ்விருப்பத்துல இருக்கிறது ஒரே விஷயந்தான்"

இது சற்று ஆழமாயிருப்பதாக தோன்றியது எனக்கு. என் முகத்திலிருந்த குழப்பம் அவருக்கு புரிந்திருக்கவேண்டும்.

"புரியறமாதிரியே சொல்றேன். நீ உன் வாழ்க்கை முழுக்க எத்தனை எழுதித்தள்ளினாலும் அதுல இருக்கிற ஆதார அடிநாதம் ஒண்ணுதான். ஒரே விஷயம்தான். அந்த ஒரே செய்தியைத்தான் எல்லாவிதமாவும் சொல்லுவ"

"அது எப்புடிங்க... வாழ்க்கைதான் ஒரு ஆறுமாதிரி ஓடிக்கிட்டே இருக்கே. அப்பப்ப ஒருகை அள்ளிக்குடிக்கிறாப்ல குடிச்சிட்டு அதை அப்டியே மத்தவங்களோடயும் பகிர்ந்துகிட்டு...." எனக்கே என் பேச்சு உளறலாகத் தோன்றவே நிறுத்திவிட்டேன்.

"மொத ஒரு விசயத்தை புரிஞ்சிக்கோ. எழுத்துன்றதே வாழ்க்கையை நீ என்னவிதமா பார்க்கிற.. புரிஞ்சிக்கிற... அதாலதான் உருவாகுது. அதை தரிசனம்னு சொல்வாங்க. அது ஒருமாதிரி சிறைதான்னு வச்சிக்கயேன். இந்த வாழ்க்கைல ஒனக்கு புதுசா என்ன கெடைச்சாலும் அதை எல்லாத்தையும் அந்த தரிசனதை வச்சிக்கிட்டுதான் எடைபோடுவ. அது சரின்றதை சரின்னும் தப்புன்றதை தப்புன்னு ஏத்துப்ப. அதாவது அந்த தரிசனம்தான் உன் எஜமானனா இருக்கும். அந்த தரிசனத்தையும் ஒடைச்சிக்கிட்டு உன்னை நீ புதுப்பிச்சிக்கலன்னா அந்த தரிசனத்திலயே தேங்கிடுவ. ஒரு கட்டத்துல உனக்கான நிகழ்காலப் பார்வைன்னு ஒண்ணு இல்லாமலே போயிடும். நிறையப்பேரு அப்டி தேங்கிருக்காங்க"

நான் அதிர்ந்துபோய்விட்டேன். அவர் கூறியதன் சாத்தியம் குறித்த அதிர்ச்சி அது.

இப்பொழுது இன்னும் நிறைய எறும்புகள் தேநீர்த்துளிகளைச் சுற்றி மொய்த்துக்கொண்டிருந்ததை பரவசத்துடன் பார்த்துக்கொண்டிருந்தார்.

"உங்க கவிதைகள் நிறைய புரியலங்க" என்றேன் மெலிதான தயக்கமுடன். அவர் முறுவலித்தார். பிறகு,

"எனக்குந்தான்" என்று சிரித்தார். நானும் சேர்ந்து சிரித்தேன்.

" சிலதெல்லாம் புரியற சமாச்சாரமில்ல... உணர்ற விஷயம்" என்றார் சிரிப்பின் இறுதியில்.

நான் ஆமோதிக்கவோ மறுக்கவோ இல்லை. பிறகு திடுமென அந்தக்கேள்வியை கேட்டார்.

"எதுக்கு எழுதனும்?”

நான் தடுமாறினேன். இதற்கு என்ன பதிலளிப்பதென்று யோசித்தேன். மவுனமாயிருந்தேன்.

திடீரென்று அவர் பலமாக சிரிக்கத்துவங்கினார். தோள்கள் குலுங்க, கண்ணில் நீர்வர சிரித்தார். ஒரு பார்வைக்கு மனம் பிறழ்ந்தவர் போல தென்பட்டார். அந்த நினைவே எனக்குள் பெரும் பீதியைக் கொடுத்தது.

"சரி போயி சாக்பீஸ் எடுத்திட்டு வா" என்றார்

புழக்கடைக்குச் சென்று தேடியதில் கும்முட்டி அடுப்பில் கொஞ்சம் கரித்துண்டுகள் கிடைத்தன. அருகிலிருந்த ஒரு பசு வாயில்

நுரையொழுக "ம்மா"... என்றது. அடுக்குமாடி வளாகத்தில் எப்படி புழக்கடை வந்ததென யோசித்தபடியே, எடுத்துவந்த கரித்துண்டை அவரிடம் கொடுத்தேன்.

அவர் சுவரில் பித்தாகரஸ் தேற்றம் ஒன்றை எழுதிவிட்டு எனக்கு விளக்கமளித்துக்கொண்டிருந்தார். சட்டென அவர் என் எட்டாம் வகுப்பு கணக்காசிரியரைப்போல தோன்றினார்.
அப்படியே அச்சில் வார்த்ததுபோல.

“ காரணமில்லாம ஒரு குருவியைக்கூட பறக்கவிடக்கூடாது எழுத்துல” என்றார்.

“ஏன் பறந்தா என்னவாம்?” என்றேன். அவரை நன்றாக மடக்கிவிட்டதான பெருமிதத்துடன்.

“ முட்டாள்.. அப்பறம் அந்தக்குருவி செத்துடுச்சின்னா என்ன செய்வ?”

நான் பதிலறியாமல் விழித்துக்கொண்டிருக்க, வெளியிலிருந்து வாசற்கதவு திறக்கப்படும் அரவம் கேட்டது.

வீட்டுக்குள் நுழைந்த மனைவி என்னையும் அவரையும் மாறிமாறிப்பார்த்துவிட்டு தனது தலையிலடித்துக்கொண்டாள். என் முழங்காலிலிருந்த புண்ணில் ஈக்கள் மொய்த்துக்கொண்டிருந்தன. அதை கழுவிவிட்டு மருந்திட்டாள். எனக்கு என் மகனை கொஞ்சவேண்டும் போலிருந்தது. அவன் சற்று தொலைவில் என்னை அசூசையாக பார்த்தபடி பள்ளிச்சீருடையை களைந்துகொண்டிருந்தான்.

அவர் மறுபடி என்னிடம் கேட்டார்.

" எல்லாம் சரி. எதுக்கு எழுதனும்?”

"நம்ம அனுபவத்தை எல்லாரோடயும் பகிர்ந்துக்க" என்றேன்

"புல்ஷிட்"

"ஏன்?”

"பகிர்ந்துகிட்டு?”

நான் பதில்கூறாமல் நகரும் எறும்புகளை கவனித்தேன்.
தேநீர்த்துளிகளின் விளிம்புகள் இப்பொழுது காய்ந்துவிட்டிருந்தன.

“ வாழ்றது ஒரு அர்த்தமில்லாத மடத்தனம். மனுசன் என்னவாச்சும்

செஞ்சு அதுக்கு ஒரு அர்த்தம் குடுத்திடலாம்னு பேராசைப்படுறான். காலம் எல்லாத்தையும் முழுங்கி ஏப்பம் விட்டுட்டு அவனை ஏமாத்திடுது" எனக்கூறி பயங்கரமான சிரிப்பொன்றை வெளிப்படுத்தினார்.

" காலம்னு எதும் இருக்கிறதா எனக்கு தோனலை. அது நம்மளோட வெத்து கற்பனை "

நான் கூறியதை துளியும் பொருட்படுத்தாதவராக அவர் தொடர்ந்தார்..

" இத்தனை காலமா யாராரோ என்னென்னவோ எழுதிமட்டும் என்னாகிடுச்சி ? வலியும் துயரமுந்தான் மனுசனோட நிஜமான நிழல்"

" நீங்க மட்டும் எதுக்காக எழுதுனீங்களாம்?" என்றேன் ஆத்திரத்துடன். எனது விரல்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. ஒரு பேரழுகைக்கான ஆயத்தங்களுடன் எனது உதடுகள் கோணிக்கொண்டன.

அவர் என்னை கொன்றுவிடுவதுபோல ஒரு பார்வை பார்த்தார். பிறகு சிலவிநாடிகள் தனக்குள் எதையோ முனுமுனுத்தார்.

"எல்லாம் பைத்தியக்காரத்தனம்.. ஆமா.. எல்லாமே தான்"

"இந்த வாழ்க்கை மாதிரியா?"

" ம்... நீ எல்லாத்தையும் சரியா புரிஞ்சிக்கிற" என்றபொழுது அவரது கண்கள் ஒளிர்ந்தன.

எனக்கு திடீரென்று மிகவும் மகிழ்ச்சியாயிருந்தது. சாளரத்தையொட்டிய மேஜையில் அமர்ந்துகொண்டு ஒரு சிறிய காகிதத்தில் மளமளவென சிலவரிகள் கிறுக்கிவிட்டு அதை அவரிடம் காட்டினேன்.

"குப்பை.. ஒன்றுக்கும் உதவாத பெருங்குப்பை" என்று அதைக்கசக்கி எறிந்தார். எனக்கு நிரம்ப வருத்தமாயிருந்தது.

"உங்களுக்கு என்ன பைத்தியமா?"

" ஆமா"

"அப்பச்சரி"

என் மனைவி தட்டில் எதையோ எடுத்துவந்தாள். நான் சரியாக எடுத்து சாப்பிட்டபோதும் என் மேலெல்லாம் சோற்றுப்பருக்கைகள் சிதறியது. டீவியில் யாரோ நடனமாடினார்கள்.

"சரி நேரமாச்சு நா கெளம்பறேன்"

"இருங்க என்ன அவசரம் ? கொஞ்சநேரம் இருந்திட்டுப்போங்க" என்றேன்.

அவர் துளியும் சட்டை செய்யாமல் அவசரமாக சுவரினுள் நுழைந்து காணாமற் போனார்.

நான் எனது கணுக்காலிலிருந்த சங்கிலியை பிடித்திழுத்தேன். அது அறுபடவேயில்லை. பலநூறு எறும்புகள் என் திசைநோக்கி மெதுவாக நகர்ந்து வந்தன.

ஒரு கைப்பிடி நிறைய எறும்புகளை அள்ளி வாயிலிட்டு மென்றபடி, சுவரிலிருந்த பித்தாக்கரஸ் தேற்றத்தை அழித்துவிட்டு அல்ஜீப்ராவை எழுதத்துவங்கினேன்